# திருமந்திரச் சிந்தனைகள்

## அட்ட வீரட்டம்

முனைவர் ரா. மகாதேவன்



திருமூலர் திருமந்திரப் பெருமன்றம்
69, சாத்தனூர், (வழி) நரசிங்கம்பேட்டை
மயிலாடுதுறை மாவட்டம் - அஞ்சல் குறியீட்டு எண் : 609 802

| | |
|---|---|
| **Title** | திருமந்திரச் சிந்தனைகள்<br>அட்ட வீரட்டம் |
| **Author** | Thirumoolar |
| **Explanation and notes** | Dr. R. Mahadevan |
| **Language** | Tamil |
| **Subject** | Thirumandiram (select verses) |
| **Edition** | 1st edition September 2023 |
| **Price** | 100 INR |
| **Books available with** | 1. The author<br>2. Universal Publishing,<br>68, Royappetta High Road,<br>Chennai 600014 |
| **Copyright** | Dr. R. Mahadevan<br>(ph 9840929729)<br>1B, Sujatha apts.,<br>103,4th street<br>Abiramapuram<br>Chennai 600018 |





திருக்கயிலாய பரம்பரைத்
திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்து நான்காவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள்
திருவாவடுதுறை (அஞ்சல்) - 609 803, நாகை மாவட்டம். தொலைபேசி : 04364 - 232021

நாள் : 11.10.2023

## அருள் வாழ்த்துரை

சைவப் பெருமைத் தனிநாய கன்நந்தி
உய்ய வகுத்த குருநெறி ஒன்றுண்டு
தெய்வச் சிவநெறி சன்மார்க்கம் சேர்ந்துய்ய
வையத் துளார்க்கு வகுத்துரைத்தானே.
– திருமந்திரம்.

திருமந்திரச் சிந்தனைகள் – அட்டவீரட்டம் என்னும் நூல் முனைவர். திரு. ரா. மகாதேவன் அவர்களால் எழுதப் பெற்றுத் திருமூலர் திருமந்திரப் பெருமன்றத்தின் மூலம் வெளிவர உள்ளமை அறிந்து மகிழ்ச்சி அடைகின்றோம்.

சிவபெருமான் நிகழ்த்தி அருளிய எட்டு வீரச் செயல்களைப் புராணங்களின் அடிப்படையில் விளக்கி, அச்செயல்களால் குறிப்பிடப்பெறும் தத்துவங்களைத் திருமந்திரம் எடுத்துரைக்கும் பாங்கினை நூலாசிரியர் தெளிவுற விளக்கியுள்ளார்.

நூலை வினா விடை முறையில் அமைத்திருப்பது கற்போருக்கு ஊக்கம் தரும் முறையில் உள்ளது. அழகிய புகைப்படங்களை இணைத்திருப்பது நூலுக்கு மேலும் பொலிவு சேர்க்கின்றது.

சாத்தனூர் திருமூலர் ஆலயத்தில் குருபூசைதோறும் திருமந்திரம் சார்ந்த நூல் வெளியிட்டு வருதல் பாராட்டுக்குரிய சிவபுண்ணியச் செயலாகும்.

முனைவர். திரு. ரா. மகாதேவன் அவர்களின் சிவநெறி எழுத்துப்பணிகள் மேன்மேலும் சிறந்து தழைக்க வேண்டி, நமது ஆன்மார்த்த மூர்த்திகளாகிய ஸ்ரீ ஞான மாநடராஜப் பெருமான் திருவடி மலர்களைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.




பெறுநர் :
திருமிகு. முனைவர். **ரா. மகாதேவன்** அவர்கள்,
சென்னை.

உ

# திருமந்திரச் சிந்தனைகள்
## அட்ட வீரட்டம்

## முன்னுரை

பத்தாம் திருமுறையாக வைத்துப் போற்றப்படும் திருமந்திரம் திருமூலர் நமக்கருளிய ஒரு ஞானநூல். அவை ஒன்பது தந்திரங்களாக வகுத்துப் பொருள் கொள்வது ஒரு மரபு. திருமந்திரம் சைவ ஆகமங்களின் உட்பொருளைத் தம்முள் அடக்கியிருப்பதாகக் கூறுவர்.

**“சிந்தை செய்தாகமம் செப்பலுற்றேனே’ (திரு-83)** என்ற திருமூலர் கூற்று இந்தக் கருத்தை உறுதிப்படுத்துகிறது.

வேதம், ஆகமம் இரண்டுமே இறைவனால் அருளப்பட்டவை, மனித முயற்சியால் தோற்றுவிக்கப்பட்டவை அல்ல என்பதை

**“வேதமோடாகமம் மெய்யாம் இறைவன் நூல்**
**ஓதுஞ்சிறப்பும் பொதுவும் என்றுள்ளன”. (திரு. 2397)**

என்ற திருமந்திரத்தால் அறியலாம்.

**‘ஆகமமாகி நின்று அண்ணிப்பான் தாள் வாழ்க’** என்று சிவபெருமானே ஆகமமாகி இருத்தலை மாணிக்கவாசகப் பெருமான் குறிப்பிடுவார். ஆகமம் என்ற சொல்லிற்கு விளக்கம் தரும் வகையான் ஒரு வடமொழிப் பாடல் உண்டு.

**ஆகதம் சிவ வக்த்ரேப்ய: கதம் ச கிரிஜாமுகே!**
**மதம் ச சிவ பக்த்தானாம் ஆகமம் சேதி கத்யதே!!**

சிவபெருமானின் ஐந்து முகங்களினின்றும் வெளிப்பட்டவை 28 ஆகமங்கள்.

**“நவ ஆகமம் எங்கள் நந்தி பெற்றானே” (திரு. 106)**

என்ற திருமந்திரத்தால், திருமூலருக்குக் கிடைக்கப் பெற்றது ஒன்பது ஆகமங்களே என்று அறிகிறோம்.

**“பெற்ற நல் ஆகமம் காரணம் காமிகம்” (திரு. 107)**

என்று தொடங்கும் திருமந்திரப் பாடல் அந்த ஒன்பது ஆகமங்களின் பெயர்களைப் பட்டியலிட்டுப் பேசும். அந்தப் பாடலில் வரும் **யாமளம்** என்பது சைவாகமம் அல்ல, என்பதாலும், **காலோத்தரம்** என்பது மூலாகமமாகாது என்பதாலும், திருமூலர் குறிப்பிடப்போந்த ஒன்பது ஆகமங்கள் இவைதான் என்று நிச்சயமாகக் கூறமுடியவில்லை. அது எப்படி இருப்பினும், இவைகளுள் முக்கியமானதும், அளவில் மிகப்பெரியதுமானது **'காமிக ஆகமம்'**. சிவபெருமானின் சத்யோஜாதம் என்னும் முகத்தினின்றும் தோன்றியது.

ஆகமங்கள் நான்கு பகுதிகளைக் கொண்டவை. அவை ஞானம், யோகம், கிரியை, சரியை என்று பெயர் கொண்டவை. ஞானபாதம் சிவபெருமானுடைய ஸ்வரூபத்தையும், சீவாத்மாக்களின் பாகுபாடுகளையும், சக்தியின் ஸ்வரூபத்தையும், முப்பத்தாறு தத்துவங்களின் விளக்கத்தையும், ஸ்ருஷ்டி, ஸ்திதி, ப்ரளயம் முதலானவற்றின் முறைமைகளையும், ப்ரபஞ்சத்துக்குக் காரணமான மாயையின் வெவ்வேறு தோற்றங்களையும் எடுத்துக் கூறும்.

யோகபாதம், என்பது இயமம் தொடங்கி, சமாதி ஈறாக அட்டாங்க யோகத்தின் எட்டுப் படிகளையும், அவைகளின் பயிற்சி முறைகளையும், மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களின் விவரங்களையும், குண்டலினி சக்தியை மூலாதாரத்திலிருந்து எழுப்பி ஆதாரங்களின் வழியே சஹஸ்ராரத்திற்குக் கொண்டு செல்லும் வழிமுறையையும் விளக்கிக் கூறும்.

கிரியா பாதம், மந்திரங்களை உபயோகிக்கும் விதம், பூஜை, ஹோமம் முதலிய விதிகள், அருச்சனை, அபிஷேகம் முறைகள், கும்பாபிஷேக உத்சவ விதிகள், சிவலிங்க இலக்கணம் முதலியவற்றை விவரிக்கும்.

சரியா பாதம் சரீர சுத்தி, ஜெபமாலை, கமண்டலம், விபூதி தாரணம், மற்றும் சிவ பூஜைக்குரிய சாதனங்கள், நீத்தார் கடன் செய்யும் முறை, பிராயச்சித்த விதிகள் இவற்றை விளக்கும்.

**காமிகம்** ஆகமங்களுள் முதன்மையானதும் அளவில் பெரியதுமாகும். தமிழ்நாட்டில் பெரும்பாலான சிவன் ஆலயங்களில் ஆராதனை முறை இந்த ஆகமத்தின் படியே நடந்து வருகின்றது.

இந்த ஆகமத்தில் சொல்லப்பட்டவை அனைத்தும் திருமந்திரத்தின் இரண்டாம் தந்திரத்தில் காணப்படவில்லை. ஒரு சில செய்திகள் இந்தத் தந்திரத்திலும், வேறு சில மற்ற தந்திரங்களிலும் காண்கிறோம்.

திருமந்திரம் முதல் தந்திரத்தில் பொதுவான சில நீதிகளையும், ஒழுக்கப் பண்புகளையும் சொல்லி, சிவ பரத்துவத்தை நிலைநாட்டி, தான் சொல்லப் போகும் விஷயத்தை சுருக்கமாகக் காண்பித்து, இரண்டாம் தந்திர துவக்கத்தில் புராணங்களிலிருந்து சிவபெருமானின் வீரச்செயல்கள் எட்டினையும் அவைகளின் உட்கருத்தையும் விவரிக்கிறார் திருமூலர். இந்த எட்டு வீரச்செயல்களும் எட்டு திருத்தலங்களில் கொண்டாடப்படுகின்றன. அட்ட வீரட்டானம் என்று அத்தலங்களுக்குப் பெயர். வீரஸ்தானம் என்ற

வடமொழிச்சொல் வீரட்டானம் ஆயிற்று. வீரஸ்தானம் என்றால் வீரச்செயலைப் போற்றும் இறைவனின் சன்னிதானம் என்று பொருள். அந்த வீரச்செயல்களை திருமூலர் தலத்திற்கு ஒரு பாடலாக விவரிக்கிறார்.

சிவபெருமானின் மறக்கருணையைக் காட்டும் இந்த எட்டு வீரச்செயல்களும், தனித்தனியே புராணங்களில் விரித்துச் சொல்லப் பட்டிருந்தாலும், அவைகளைத் தொகுத்து வீரட்டம் என்று பெயரிட்டுப் போற்றும் பாங்கினை முதன் முதலில் வகுத்துக் கொடுத்தது திருமூலரே என்று கருதத் தோன்றுகிறது.

வடமொழி நூல்களிலும் சரி, தமிழ் ஆன்மிக நூல்களிலும் இதற்கு முன் அட்ட வீரட்டம் என்ற தொகுப்பு இருப்பதாகத் தெரியவில்லை. திருமூலர் காலத்திற்குப் பின் அட்ட வீரட்டத் தலங்களும் மக்களிடையே பிரசித்தியடைந்திருக்கக் கூடும். தேவார மூவர்களும் வீரட்டான இறைவனைப் போற்றிப் பதிகங்கள் பாடியுள்ளதால் இதனை அறியலாம். அந்த எட்டு வீரச்செயல்களையும், அதற்குரிய புராண வரலாற்றையும், தலங்களின் சிறப்பையும், அந்த வீரச்செயல் மூலம் திருமூலர் நமக்கு உணர்த்தும் செய்தி என்ன என்பதையும் தொகுத்துக் கொடுக்கும் முயற்சியே இச்சிறுநூல்.

இந்த நூல் வினா – விடை வடிவத்தில் அமைக்கப்பட்டுள்ளது. தேவையான பகுதியை தெரிந்து எடுத்து படிப்பதற்கு அது உதவியாக இருக்கும் என்பதால்.

அந்த அந்த வீரச் செயலுக்குண்டான மூர்த்தியின் வண்ணப் படங்களும், தேவாரப் பாடல்களிலிருந்து மேற்கோள்களும் இணைக்கப்பட்டுள்ளன.

திருக்கயிலாயப் பரம்பரை திருவாவடுதுறை ஆதீனம், 1950 – 60 களில் திருமந்திர மாநாடுகள் நடத்தி, மலர்கள் வெளியிட்டு வந்தனர். 1962, ஜனவரி மாநாட்டு மலரில் திரு கி.வா. ஜகந்நாதன் அவர்கள் ஆற்றிய சொற்பொழிவு வெளியிடப்பட்டிருந்தது. இந்தச் சிறு நூலுக்கு அந்தக் கட்டுரை ஒரு உந்துதலாக இருந்தமையால், அக்கட்டுரையை, நன்றியறிதலுடன் இந்த நூலின் இறுதியில், வெளியிட்டுள்ளோம்.

சிவபெருமானின் எட்டு வீரச் செயல்களை ஒட்டிய புராண வரலாற்றை விரித்துக் கூறுவது இந்த நூலின் முக்கிய நோக்கமல்ல. சுருக்கமாக அதைத் தெரிந்து கொண்டு, அதனின்றும் திருமூலர் நமக்கு அறிவுறுத்தும் படிப்பினை என்ன என்பதை அறிந்து கொள்ள முயல்வது இந்த நூலின் நோக்கம்.

திருமந்திர அன்பர்கள் இதைப் படித்துச் சிறிதேனும் பயனடைவார்கள் என்று நம்புகிறோம்.

இனி நூலுக்குள் செல்லலாம்.

திருச்சிற்றம்பலம் 

உ

# திருமந்திரச் சிந்தனைகள்

## அட்ட வீரட்டம்

**1. அட்ட வீரட்டம் என்றால் என்ன?**

அட்ட வீரட்டம் என்றால் சிவபெருமான் அருளிச் செய்த வீரச்செயல்களைப் புலப்படுத்துகின்ற எட்டு வீரஸ்தலங்கள் என்று பொருள்.

**2. அந்தப் பெயர் எப்படி வந்த்து?**

வீரஸ்தானம் என்ற வடமொழித் தொடர் வீரட்டானம் என்று தமிழிலே மாறி வந்தது. அது மேலும் நாளடைவில் வீரட்டம் என்று மாறியது. அட்ட என்றால் எட்டு. இறைவன் செய்த எட்டுவகையான வீரச்செயல்களைக் குறித்துப் போற்றும் வகையிலே அமைந்த எட்டு தலங்களை ‘வீரட்டம்’ என்று குறிப்பிடுவார்கள். அவைகளில் ஏழு தலங்கள் தேவாரப் பாடல்கள் பெற்ற தலங்கள். வழுவூர் மட்டும் வைப்புத் தலமாக உள்ளது.

**3. அந்த எட்டு வீரச்செயல்கள் யாவை?**

அவையாவன 1. அந்தகாசுர வதம், 2. தக்கன் யாகத்தை அழித்தல் 3. பிரமன் தலையைத் துண்டித்தல் 4. சலந்திரன் வதம் 5. திரிபுரத்தினை எரித்தது 6.கஜஸம்ஹாரம் 7. காலனை உதைத்தது 8. காமனை எரித்தது, என்பவைதான் அந்த எட்டு வீரச்செயல்கள்.

**4. அந்த எட்டு வீரச்செயல்களைப் போற்றும் தலங்கள் எவை என்று கூறமுடியுமா?**

அந்த வீரச்செயல்களுக்குறிய எட்டுத்தலங்களும் தமிழ் நாட்டிலேதான் உள்ளன. கீழ்க்கண்ட அட்டவணையில் அந்த தலங்களின் பட்டியலைக் காணலாம்.

| எண் | வீரச்செயல் | தலத்தின் பெயர் |
|---|---|---|
| 1. | அந்தகாசுரன் வதம் | திருக்கோவிலூர் |
| 2. | தக்கன் யாகத்தை அழித்தல் | திருப்பறியலூர் |
| 3. | பிரமன் தலையைக் கொய்தல் | திருக்கண்டியூர் |
| 4. | சலந்திரன் வதம் | திருவிற்குடி |
| 5. | திரிபுரத்தை எரித்தது | திருவதிகை |

| | | |
|---|---|---|
| 6. | கஜ சம்ஹாரம் | திருவழுவூர் |
| 7. | காலனை உதைத்தது | திருக்கடவூர் |
| 8. | காமனை எரித்தது | திருக்குறுக்கை |

**5. திருமூல நாயனார், தனது திருமந்திரத்தில் சிவபெருமானின் இந்த எட்டு வீரச்செயல்களையும் போற்றிப் பாடியிருக்கின்றாரா?**

சிவபெருமானுடைய வீரச்செயல்கள் பலவற்றுள் சிறப்புடைய எட்டு செயல்களைத் திருமந்திரத்தின் இரண்டாம் தந்திரத்தின் துவக்கத்திலேயே எட்டு பாடல்களால் போற்றிப் பாடுகிறார் திருமூலர். ஒவ்வொரு வீரச்செயலுக்கும் ஒவ்வொரு பாடலாக அருளிய நாயனார், தக்கன் வேள்வி புராணங்களில் விரிவாக உரைக்கப்படுவதாலும், அதன் சிறப்பினையுரைக்க ஒரு பாடல் போதாதென்று ஒருவேளை கருதியதாலும், அவர் ஒன்பது பாடல்களால் தக்கன் வேள்வியை விளக்கியுரைக்கிறார். திருவாசகத்தில் திருவுந்தியார் முழுவதிலும் தேவாரப் பதிகங்கள் பலவற்றிலும் தக்கன் வேள்வி சிறப்பாகப் பேசப்படுவதைக் காணலாம்.

**6. நீங்கள் கூறியபடி சிவபெருமானின் எட்டு வீரச்செயல்களும், குறிப்பிட்ட தலங்களில் நிகழ்ந்தவைதான் என்று எப்படி உணரலாம்?**

திருமூல நாயனார். தனது திருமந்திரத்தில், கால சம்ஹாரம் செய்த திருக்கடவூர் தலத்தையும், காமதகனம் செய்த திருக்குறுக்கை என்னும் தலத்தையும் மட்டுமே பெயர் சொல்லிக் குறிப்பிடுகிறார்.மற்ற வீரச் செயல்களின் தலங்களைப் பெயர் சொல்லிக் குறிப்பிடவில்லை. இதனால் சிவபெருமானின் எட்டு வீரச்செயல்கள் பிரசித்தமாய் இருக்கும் அளவுக்கு அந்தத் தலங்கள் அவ்வளவு பிரபலமாய் நாயனார் காலத்தில் இருக்கவில்லையோ என்று நினைக்கத் தோன்றுகிறது.

திருமூலருக்கு பின் வந்த நாவுக்கரசு ஸ்வாமிகள் அருளிய அடைவுத் திருத்தாண்டகத்தில் (ஆறாம் திருமுறை) அட்ட வீரட்டானத் தலங்களைப் பட்டியலிட்டு காட்டியிருக்கிறார்.

**“காவிரியின் கரைக்கண்டி வீரட்டானம்,**
**கடவூர் வீரட்டானம், காமருசீர் அதிகை**
**மேவிய வீரட்டானம், வழுவை வீரட்டம்,**
**வியன் பறியல் வீரட்டம், விடையூர் திக் கிடமாம்**
**கோவல் நகர் வீரட்டம், குறுக்கை வீரட்டம்,**
**கோத்திட்டைக்குடி வீரட்டான மிவை கூறி**
**நாவில் நவின்று உரைப்பார்க்கு நணுக்கச் சென்றால்**
**நமன் தமரும் சிவன் தமர் என்று அகல்வர் நன்கே.”**

என்பதே அப்பாடல். திருநாவுக்கரசு அடிகள் குறிப்பிட்ட கோத்திட்டைக்குடி இன்று திருவிற்குடி என்று அழைக்கப்படுகிறது.

**7. அந்த எட்டு வீரச்செயல்களுள் முதலாவதாக எதைக் குறிப்பிடுகிறார் திருமூலர்?**

அந்தகாசுரன் என்ற ஒரு அசுரன், தான் பெற்ற வரத்தால் உலகத்து உயிர்கள் எல்லாவற்றையும் துன்புறுத்தி வந்தான். சிவபெருமான் அவ்வசுரனை தன் சூலாயுதத்தால் குத்தி அழித்ததை முதல் வீரச்செயலாகப் போற்றுகிறார் திருமூலர்.

**8. அந்தப் புராண வரலாற்றைச் சற்று விளக்கிச் சொல்லமுடியுமா?**

திருமந்திரத்தில் இரண்டாம் தந்திரத்தில் இலிங்க புராணம் என்ற தலைப்பில் சில பாடல்களை திருமூலர் அருளியுள்ளார். அட்டவீரட்டத்தை அடுத்து இப்பாடல்கள் அமைந்துள்ளன. பாடல்களின் தலைப்பு, திருமூலரே அமைத்துக் கொடுத்ததா, அல்லது பின்னர் வந்தவர்கள் அமைத்தனரா என்பது சந்தேகத்திற்கு இடமாக இருப்பினும் பாடல்கள் அனைத்தும் திருமூலர் அருளியவையே என்பதில் ஐயமில்லை. வியாச பகவான் அருளிய பதினெட்டு புரணங்களில் இலிங்க புராணம் குறிப்பாக திருமந்திரத்தில் கையாளப்பட்டிருப்பதால் திருமூலர் அட்ட

வீரட்டத்துக்கான புராணச் செய்திகளை இலிங்க புராணத்தை ஒட்டியே தன் பாடல்களில் அமைத்திருப்பார் என்று கருத இடமுண்டு. ஆகவே இலிங்க புராணத்தில் காணப்படும் அந்தகாசுர வதத்தின் வரலாற்றை இங்கு காண்போம்.

இரண்யாட்சன், இரண்யகசிபு என்ற இரண்டு அசுரர்களை பற்றிய புராணக்கதையை எல்லோரும் அறிந்திருப்பார்கள். திருமால் எடுத்த பத்து அவதாரங்களில் நரசிம்மாவதாரத்தின் மூலம் இரண்யகசிபுவையும், வராஹ அவதாரத்தின் மூலம் இரண்யாட்சனையும் அழித்த வரலாறு நாம் எல்லோரும் அறிந்த ஒன்று.

இவர்களுள் இளையவனான இரண்யாட்சனின் குமாரன் புராந்தகன் என்ற அசுரன். அவன் பிரம்மாவை நோக்கிக் கடும் தவமியற்றி சிவனைத் தவிர வேறு யாராலும் வெல்ல முடியாத வரத்தைப் பெற்றான். தான் பெற்ற பெருவரத்தால் கர்வமடைந்த அந்தகன் எல்லா உலகங்களையும் வென்று உயிர்களையெல்லாம் துன்புறுத்தினான். இந்திரன் முதலான தேவர்கள் அந்தகன் கொடுமை தாங்கமாட்டாதவர்களாய், ப்ரும்மா, விஷ்ணு இவர்களுடன் மந்திரகிரியை சென்றடைந்தனர். அங்கு சென்று சிவபெருமானிடம் தஞ்சமடைந்ததைக் கண்ட அந்தகன் சிவபெருமானுடனேயே போர்புரியத் துணிந்தான். சிவகணங்களுடன் கூடி, இறைவன் அசுரசைன்யங்களை நொடிப்பொழுதில் சாம்பலாக்கி, அந்தகனையும் தன் சூலத்தில் ஏற்றி ஒடுக்கினார். அந்தகனும் தன் தவறை உணர்ந்து சிவனைத் தோத்திரம் செய்ய, சிவனும் உளம் குளிர்ந்து அந்தகனுக்கு அவன் வேண்டியபடியே, சிவகணங்களின் தலைமைப் பதவியை வழங்கியருளினார்.

### 9. அந்தகன் வரலாற்றைச் சொல்லும் திருமந்திரப் பாடலை தெரிந்து கொள்ளலாமா?

பதிவலிவீரட்டம் என்னும் இயல் பகுதியில் வரும் முதல் பாடல் இது.

**‘கருந்துறை யந்தகன் தன்போல் அசுரன்**
**வரத்தின் உலகத்து உயிர்களை எல்லாம்**
**வருத்தம் செய்தான் என்று வானவர் வேண்டக்**
**குருத்துயர் சூலம் கைகொண்டு கொன்றானே. (திரு. 339)**

பொருள்:- ‘அந்தகன் என்ற அசுரன் தான் பெற்ற வரத்தால் உலகத்து உயிர்களை எல்லாம் துன்புறுத்தினான். அக்கொடுமை தாங்காமல் தேவர்கள் எல்லாம் இறைவனிடம் சென்று முறையிட்டனர். சிவபெருமான் அவர்கள் வேண்டுகோளுக்கு இணங்கி கூர்மையான சூலத்தின் நுனியில் ஏற்றிக் கொன்று அருளினார்.

### 10. சரி. இந்த அந்தகாசுர வதத்தின் மூலமாக திருமூலர் நமக்கு என்ன அறிவுறுத்திகிறார்?

அந்தகன் என்ற சொல் இருள் அல்லது அறியாமை, யமன் என்றும் இரு பொருள் படும். இருளும் சரி, யமனும் சரி, கருமை நிறைந்தவை. சிவ புராணத்தின் படி, உமையம்மை சிவபெருமானின் கண்களை விளையாட்டாகப் பொத்திய கணப்பொழுதில், அகில உலகமும் இருள் சூழ்ந்த தருணத்தில் அந்தகன் தோன்றியதாகக் காண்கிறோம். ஆணவ மலம் அறிவை அழித்து அஞ்ஞானத்தைக் கூட்டுவித்தலால், அந்தகன் ஆணவத்தின் வெளிப்பாடு. சிவன் ஞானஸ்வரூபி. அறிவிக்கு அறிவானவன். அறியாமையை ஞானத்தைக் கொண்டுதானே அழிக்கவேண்டும்? ஆகவே சிவபெருமானே அடியார்களின் அறியாமையாகிய ஆணவத்தை அழித்து, ஞானத்தைக் கொடுத்து, மோட்சத்தை நல்குவான் என்பது இந்தப் புராணம் உணர்த்தும் செய்தி.

மூன்று முனைகளுள்ள திரிசூலத்தால் அந்தகனைக் குத்தி வருத்துவது ஏன்? சீவாத்மாக்கள் எல்லாம் மூன்று மலங்களுடன் கூடியவை. கன்ம மலம். மாயா மலம், ஆணவ மலம் என்று. அந்த மும்மலங்களும் நீங்கப் பெற்றால்தான் சீவாத்மா, பரமாத்மாவை அடைய முடியும். மும்முனை கொண்ட சூலத்தால் குத்துவது அந்த மும்மலங்களையும் சிவனுடைய கருணையால் அழிபட்டுப் போவதைக் குறிக்கும்.

### 11. இந்தத் தலத்திற்குறிய தேவாரப் பாடல்கள் ஏதேனும் உண்டா?

ஆம். திருநாவுக்கரசு சுவாமிகள் இந்தத் தலத்து வீரட்டானப் பெருமானைப் போற்றி ஒரு பதிகம் அருளியுள்ளார்கள். உதாரணத்திற்கு அதில் ஒரு பாடலைப் பார்ப்போம்.

**"விரிகட லிலங்கைக் கோனை வியங்கயி லாயத் தின்கீழ்**
**இருபது தோளும் பத்துச் சிரங்களும் நெரிய வூன்றிப்**
**பரவிய பாடல் கேட்டுப் படைகொடுத் தருளிச் செய்தார்**
**குரவொடு கோங்கு சூழ்ந்த கோவல் வீரட்ட னாரே".**

**(திருமுறை 4-69-10)**

இதன் கருத்து:-

பத்துத் தலைகளும், இருபது தோள்களும் உடைய இராவணனைக் கயிலையின் கீழ் நெரியுமாறு ஊன்றிப் பின்னர் அவன் இசைத்துப் போற்றிய பாடல்களைக் கேட்டுப் படைக்கலன்களைத் கொடுத்து அருளியவர் சிவபெருமான். அவரே குரவம், கொங்கு ஆகிய மரங்கள் சூழ்ந்த திருக்கோவிலூர் வீரட்டத்தில் வீற்றிருப்பவர்.

**"அந்தகனை அயிற்சூலத் தழுத்திக் கொண்டார்**
**அருமறையைத் தேர்க்குதிரை யாக்கிக் கொண்டார்**
**சுந்தரனைத் துணைக்கவரி வீசக் கொண்டார்**
**சுடுகாடு நடமாடு மிடமாக் கொண்டார்**
**மந்தரம்நற் பொருசிலையா வளைத்துக் கொண்டார்**
**மாகாளன் வாசற்காப் பாகக் கொண்டார்**
**தந்திரமந் திரத்திரா யருளிக் கொண்டார்**
**சமண்தீர்த்தென் தன்னையாட் கொண்டார் தாமே".**

**(திருமுறை 6-96-5)**

கருத்து:-

சிவபெருமான், அந்தகாசுரனைக் கூர்மையான சூலத்தால் அழித்தவர்; அருமையுடைய வேதங்களைத் தேர் செலுத்தும் குதிரைகளாகக் கொண்டவர்; ஆலால சுந்தரரைக் கவரி வீசுமாறு கொண்டவர்; சுடுகாட்டை நடனம் புரியும் இடமாகக் கொண்டவர்; மேரு மலையை வில்லாகக் கொண்டவர்; மாகாளரைத் துவாரபாலகராகக் கொண்டவர்; வேதத்தின் பாங்கினை ஐவகை வேள்வி முதலாகிய தந்திரங்களாகவும், திருவைந்தெழுத்து முதலான மந்திரங்களாகவும், அருளிச் செய்தவர். அப்பெருமான் சமணத்தில் மேவிய என்னை மீட்டு ஆட்கொண்டவராவார்.

அந்தகன் சிவபெருமானால் சூலத்தில் ஏற்றி வருத்தியதை ஞானசம்பந்தப் பெருமான் கண்டியூர் பதிகத்திலே ஒரு பாடலில் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

**"நமரெழு பிறப்பறுக்கு மாந்தர்கள் நவிலுமின்னுமைக் கேட்கின்றேன்**
**கமரழி வயல் சூழ்ந்தண்புனற் கண்டியூருறை வீரட்டன்**
**தமரழிந்தெழு தாக்கியச் சமணாதரோது மதுகொளா,**
**தமர ரானவர் ஏத்த அந்தகன் தன்னைச் சூலத்திலாயந்ததே".**

கருத்து:-

நம் சுற்றத்தாரின் ஏழு பிறப்பு அறுக்கும் அடியவர்களாகிய மெய்த் தொண்டர்களே! மண்ணுலகில் வெடிப்பு ஏற்பட்டு வறட்சி உண்டாகாதவாறு தண்ணீர் பெருகும் வயல்கள் சூழ்ந்த கண்டியூர் வீரட்டேசுவரனே! சமணர், சாக்கியரின் சொற்களைக் கருத்துடையதாகக் கொள்ளாததும் அந்தகனைச் சூலத்தால் வதைத்ததும் எதனால்?

**12. இந்த வீரச்செயலைப் போற்றும் தலம் எது? அது எங்குள்ளது? அந்தத் தலத்தை பற்றிய விவரங்களைக் கூறவேண்டுகிறேன்.**

கள்ளக்குறிச்சி மாவட்ட்த்தில் தென்பெண்ணையாற்றங்கரையில் அமைந்துள்ள திருக்கோவிலூர் என்று தற்போது வழங்கப்படும் ஊர்தான் அந்தகாசுர வதத்தலம். இறைவன் வீரட்டானேசுவரர் என்றும், அந்தகாந்தகர் என்றும், அம்பாள் பிரஹன் நாயகி, சிவானந்த வல்லி என்றும் திருநாமங்கள் கொண்டு அருள் பாலிக்கின்றனர். மேற்கு பார்த்த கோயில். மூலவர் இலிங்க வடிவாய் எழுந்தருளியுள்ளார்.

அந்தகாரமூர்த்திக்கு உற்சவ விக்கிரஹம் மிகவும் கலைநயத்தோடு விளங்குகிறது. நான்கு கரங்களுடன் அமையப்பெற்ற இவ்வடிவம் பின் கரங்களில் மானும்,மழுவும் தாங்கியும் முன் இருகரங்கள் அந்தகாசுரனை வதம் செய்ய ஏந்திய சூலத்துடனும் காணப்படுகின்றது. சிவபெருமான் காலடியில் அந்தகாசுரன் கிடந்த நிலையில் உள்ளான். இறைவனின் வலதுகால் அந்தகனின் இடுப்பு பகுதியிலும், இடது கால் தலைப்பகுதியிலும் உள்ளன. கலைநயத்துடன் வடிவமைக்கப் பெற்றிருக்கும் இந்த இறைவன் வடிவம் பார்த்து மகிழத் தக்கது. மற்றும் ஒரு உத்சவ விக்ரஹம் அந்தகாசுரனை சூலத்தில் குத்தி துன்புறுத்தியது போல் கபால மாலையுடன் காணப்படுகிறது.

**13. திருக்கொவிலூருக்கு வேறு ஏதேனும் வரலாற்றுச் சிறப்பு உண்டா?**

நிச்சயம் உண்டு. அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவரான மெய்ப்பொருள் நாயனார் இத்தலத்தில் வாழ்ந்து திருத்தொண்டு செய்தவர். மலைநாட்டின் அரசராகத் திகழ்ந்த மெய்ப்பொருள் நாயனார், சிவனடியார்களையும், அவர்கள் அணியும் திருவேடங்களையுமே மெய்ப்பொருளாகக் கருதித் தனது பொருள் அனைத்தும் சிவனடியார்களுக்கே என்று ஒழுகி வந்தார். அவருடன் போரிட்டுத் தோற்ற முத்தநாதன் என்ற பகைவன், சூழ்ச்சியால் நாயனாரைக் கொல்ல திட்டமிட்டுப போலி சிவவேடம் தரித்து அவரை அணுகினான். மெய்ப்பொருள் நாயனாரும் அவரை உண்மைச் சிவனடியார் என்று நம்பி அவரிடம் தனித்து உபதேசம் பெறச் சம்மதித்த நிலையில், முத்தநாதன் மறைத்து வைத்திருந்த கூர்வாளால் நாயனாரைக் குத்தி வீழ்த்தினான். முத்தநாதனைத் தாக்க வந்த தத்தன் என்ற மெய்க்காப்பாளனையும் தடுத்து, முத்தநாதனைத் தீங்கு நேராமல் ஊர் எல்லைவரைக் கொண்டு விடும்படிபணித்து இறைவனடி சேர்ந்தார். இந்த வரலாற்றுச் சிறப்பு மிக்க

ஊர் இந்தத் திருக்கோவிலூர். அவருக்கு இறைவன்காட்சி தந்து அருளியதைச் சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தில் கூறுவார்;-

**“தொண்டனார்க்கு இமயப்பாவை துணைவனார் அவர்முன் தம்மைக்**
**கண்டவாறெதிரே நின்று காட்சிதந் தருளி மிக்க**
**அண்டவானவர்கட் கெட்டா அருட்கழல் நீழல் சேரக்**
**கொண்டவாறிடையறாமல் கும்பிடும் கொள்கை ஈந்தார்.”**

நரசிங்க முனையரையர் என்ற மற்றுமொரு நாயனாரும் இந்த ஊரில் தோன்றி திருமுனைப்பாடி நாட்டை ஆண்டு வந்தவர். சிவநெறியில் முறை தவறாது ஒழுகிவந்த இக்குறு நில மன்னர் திருவாதிரை நாளில் சிவபூசை செய்து பின் திருநீறு அணிந்த தொண்டர்களாய் அன்று வந்து சேர்ந்த அடியார்கள் அனைவருக்கும் நூறு பொன்னும் திருவமுதும் இட்டு பணிவிடை செய்து வந்தார். இப்படி இருக்கும் நாளில் ஒருமுறை சிவவேடம் தாங்கி திருநீறு அணிந்த ஒருவர் மானம் கெட்டு, காமக்குறிகளுடன் வந்து சேர்ந்தபொழுது அவரையும் வணங்கி உபசரித்து இருமடங்கு பொன் கொடுத்து பாராட்டி உபசரித்தார். இங்ஙனம் சிவத்தொண்டின் தன்மையை, “ஆர்க்கும் இடுமின், அவர் இவர் என்றன் மின்” என்று திருமூலர் சொன்னதுபோல எல்லோரும் உணரும்படி வாழ்ந்துகாட்டி,வீடுபேறு பெற்றவர் நரசிங்கமுனையரையர்.

**“சீலம் சிலரே எனினும் திருநீறு சேர்ந்தாரை**
**ஞாலம் இகழ்ந்தரு நரகம் நண்ணாமல் எண்ணுவார்**
**பாலணைந்தார் தமக்களித்தபடி இரட்டிப் பொன் கொடுத்து**
**மேலவரைத் தொழுதினிய மொழி விளம்பி விடை கொடுத்தார்.**
**(பெ.பு. 3994)**

**14. இந்த வீரச்செயல் சிவபெருமான் அருளால் மும்மலங்களை அழித்தலே சீவன் சிவகதியடைய வழிவகுக்கும் என்று சொல்லப்பட்டது. அந்த மும்மலங்களைப்பற்றி சற்று விரிவாகச் சொன்னால் நன்றாகயிருக்கும்.**

சொல்கிறேன். சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கைகளுள் முக்கியமானது – பதி, பசு, பாசம் என்ற முப்பொருளைப் பற்றிய அறிவு. பசு என்ற சொல் சீவாத்மாக்கள் அனைத்தையும் குறிக்கும். பதி என்பது பரம்பொருளாகிய சிவன். சீவனை இந்த உலகத்துடன் பிணைத்திருக்கும் தளையைப் பாசம் என்று கூறுவர். பாசம் என்றால் கயிறு என்று ஒரு பொருள் உண்டு. சீவனை இந்த உலகத்துடன் கட்டுவதால் பாசம் எனப்பட்டது. அந்தப் பாசம் மூன்று வகைப்படும். அவையாவன ஆணவ மலம், கன்ம மலம், மாயா மலம் என்றழைக்கப்படும். மலம் என்றாலும், பாசம் என்றாலும் ஒன்றுதான். அந்த மூன்று பாசங்கள்தான் பசுக்களைப் பிணைக்கின்றன என்று சொல்லும் திருமந்திரப்பாடல் இதோ:-

**“பசுப்பலக் கோடிப் பிரமன் முதலாய்ப்**
**பசுக்களைக் கட்டிய பாசம் மூன்றுண்டு**
**பசுத்தன்மை நீங்கிப் பாசமறுத்தால்**
**பசுக்கள் தலைவனைப் பற்றிவிடாவே (திரு. 2406)**

பசுத்தன்மை நீங்கினால்தான் பசுக்களாகிய சீவங்கள், சிவத்தை பற்றி விடாமல் நிற்க முடியும். பிரமன் முதலாய் என்று கூறப்பட்டதால் பிரமன் முதலிய தேவர்களுக்கும் பாசப்பிணைப்பு உண்டென்று ஆயிற்று. பசுத்தன்மை நீக்குதல் என்பது அறியாமையாகிய இருளைப் போக்குதல். நான், எனது என்று கருதும் அனைத்தும் நிலையற்றது. அந்த அறியாமை ஆணவ மலத்தின் விளைவு. ஈசன் அருளே நிலையானது என்ற அறிவு பெற்றிடின் பாசம் அறுபட்டுப் போகும். அந்தகனும் அவ்வாறு பாசம் விடுபட்டு இறைவன் அருளைப் பெற்ற தலம்தான் திருக்கோவிலூர் வீரட்டானம்.

**15. இந்த ஆலயத்தின் அமைப்பைச் சற்று விரித்துக் கூறுங்களேன்?**

இவ்வாலயம் தென்பெண்ணையாற்றங்கரையில் மேற்கு பார்த்து அமைந்துள்ளது. வடக்கே வீரட்டானேஸ்வரரின் ராஜகோபுரமும், தெற்கே அம்பாள் ராஜகோபுரமும் அமைந்துள்ளன. இரண்டு பிரகாரங்கள்; முதல் பிரகாரத்தில் ஔவையார் பாடிய கணபதியும், கோபுரத்தின் இடப்புறத்தில் அருணகிரிநாதர் பாடிய ஆறுமுகப் பெருமானும் உள்ளனர். அந்தகாந்தக மூர்த்திக்கு இரண்டு விதமான உற்சவ விக்கிரஹங்கள் வெகு நேர்த்தியான வேலைப்பாடுடன் வடிவமைக்கப் பட்டுள்ளன. ஒன்று, சூலத்தையும் மான் மழு இவைகளையும் தாங்கியிருக்கும். நான்கு கைகளுடன் கூடிய அமைதியான திருவுருவம். மற்றும் ஒன்று கோரைப் பற்களுடன் தலைமாலை அணிந்து அந்தகனை சூலத்தில் குத்தி உயர பிடித்திருக்கும் பைரவத் திருவுருவம். பிராகாரத்தின் இடப்புறத்தில் மெய்ப்பொருள் நாயனாரும்,அந்தகாசுர மூர்த்தியின் உற்சவ விக்கிரகம் வெகு நேர்த்தியான வேலைப்பாடுடன் கூடியது.

இந்த பிராகாரத்தின் இடப்புறத்தில் நரசிங்க முனைவரையாரும், மெய்ப்பொருள் நாயனாரும் உள்ளனர். பிராகரத்தில் உள்ள விநாயகப் பெருமான் ஔவையாருக்கு கைலாயம் அடைய அருள் புரிந்தவர். இந்த நிகழ்வை காட்டும் ஒரு சிற்பம் விநாயகரின் சன்னிதியில் காணலாம். கர்ப்பக்ருகத்தில் உள்ள மூலவர் பெயர் வீரட்டானேஸ்வரர். அம்பாளின் பெயர் பிருஹன் நாயகி அல்லது சிவானந்தவல்லி.

**16. இரண்டாவதாகக் கூறப்படும் வீரச்செயல் எது?,அதை யொட்டிய புராணக்கதை என்ன?**

திருமந்திரம் கூறும் சிவபெருமானின் இரண்டாவது வீரச்செயல் தக்கயாகத்தினை அழித்தது. இந்தப் புராண வரலாறு வெவ்வேறு புராணங்களில் வெவ்வேறு விதமாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. அவற்றுள் சிவபுராணமும், இலிங்க மகாபுராணமும் ஒன்றை யொன்று ஒத்துள்ள வரலாற்றைக் கூறுவன. அதன்படி, சுருக்கமாக இந்தப் புராணச் செய்தியைத் தெரிந்து கொள்வோமா?

படைப்புக் கடவுளான பிரம்மாவின் புதல்வர்கள் ப்ரஜாபதி என்றழைக்கப்படுவர். அவர்களுள் தக்கப் ப்ரஜாபதி முக்கியமானவர்.

தக்கனுடைய அறுபத்து நான்கு பெண்களில் கடைசிப்பெண் தாக்ஷாயணி என்னும் சதிதேவி. அவள் செய்த தவத்தின் பயனாய் சிவனையே கணவனாகப் பெறும் பாக்கியத்தை அடைந்தாள். கயிலையில் சிவனும், சதிதேவியும் ஆனந்தமாய் இருக்கையில் ப்ரும்மா ப்ரயாகையில் ஒரு பெரிய யாகம் செய்யத் துவங்கினார். அதற்கு அனைத்து தேவர்களும் சிவபெருமான் சதிதேவி உட்பட வந்திருந்தனர். தாமதமாக அங்கு வந்து சேர்ந்த தக்ஷப் பிரஜாபதிக்கு எல்லோரும் எழுந்திருந்து வணக்கம் தெரிவிக்கையில் ப்ரும்மாவும், சிவபெருமானும் தம் இருக்கையிலேயே அமர்ந்திருந்தனர். அதனால் ஏற்கனவே தான் என்ற அகந்தையால் பூரித்திருந்த தக்கன் மிகுந்த கோபமடைந்தான். தகாத வார்த்தைகளால் சிவபெருமானை ஏசினான்.

அந்த யாகம் முடிந்து எல்லோரும் அவரவர்கள் இடத்திற்கு திரும்பிச் சென்றும் தக்கனின் கோபம் தணியவில்லை. இதுவரை யாரும் கண்டிராத வகையில் ஆடம்பரமாகத் தானும் ஒரு யாகத்தைச் செய்ய ஆயத்தமானார். தேவர்கள் அனைவருக்கும் அழைப்பு விடுத்தவன், சிவன் சதிதேவியருக்கு அனுப்பாமல் விடுத்தான். ஆனாலும் சிவனார் தடுத்தும் கேளாமல் அந்த யாகத்திற்கு சென்ற சதிதேவியை, தக்க வரவேற்பு கொடுக்காமல் அவமதித்ததோடு எல்லோர் முன்னிலையிலும் சிவனாரை வசை பாடினான். தன் கணவருக்கு இழைக்கப்பட்ட அநீதியை பொறுக்க மாட்டாமல் சதிதேவி, தாக்ஷாயணி அல்லது தக்ஷனின் புதல்வி என்ற பெயரே தனக்கு ஒரு அவமானச் சின்னம் எனக் கருதி தன் உடலை அந்த யாகத்தீயிலேயே மாய்த்துக்கொண்டாள். சிவகணங்கள் இந்தச் சோகச் செய்தியை சிவனாருக்குத் தெரிவிக்க, சிவபெருமான் தன் ஜடாமுடியிலிருந்து ஒரு மயிர்க்கற்றையை வெள்ளிமலையின் மேல் வீசவும், அக்கற்றையிலிருந்து ஆயிரம் கைகள் படைத்த வீரபத்திரத்தேவர் தோன்றினார். அத்துடன் பத்ரகாளிதேவியும் உடன் தோன்றியதாகச் சிவபுராணம் கூறும். சிவனாரின் ஆணையைப் ஏற்று வீரபத்திரர் காளியுடன் சேர்ந்து தக்கனின் யாகத்தை அழித்து தக்கனின் தலையையும் துண்டித்தனர். பதிவிரதையும், சதியின் தாயுமான வீரிணி தேவியின் வேண்டுகோளுக்கிரங்கி, தக்கனுக்கு மறுபடியும் உயிர் கொடுத்து, அவன் தலைக்கு பதில் ஒரு ஆட்டின் தலையைப் பொருத்தி அந்த யாகத்தையும் நிறைவேற்றிச் சென்றார் சிவபெருமான் என்பது புராணக்கதை.

### 17. திருமூலர் இந்தப்புராணச் செய்தியை எவ்வாறு விவரிக்கிறார்?

திருமந்திரம் கீழ்கண்டபாடலில் இந்தப் புராணச் செய்தியைக் கூறுகிறது.

**“கொலையின் பிழைத்த பிரசாபதியைத்**
**தலையைத் தடிந்திட்டுந் தான் அங்கியிட்டு**
**நிலை உலகுக்கு இவன் வேண்டும் என்று எண்ணித்**
**தலையைப் பரிந்து இட்டுச் சந்தி செய்தானே. (திரு. 340)**

பாடலின் கருத்து:- யாகம் செய்யும்பொழுது சிவபெருமானை இகழ்ந்ததால் பிழை செய்த தக்கனின் வேள்வியை அழித்தார் வீரபத்திரக் கடவுள். சிவ

நிந்தை செய்த தக்கனின் தலையைத் துண்டித்து தீக்கிரையாக்கினார். இருப்பினும் தக்கன் உலகின் தொடர்ச்சிக்கு இன்றியமையாதவன் என்று கருதி, அவனை முற்றிலும் அழிக்காமல் ஆட்டின் தலையைப் பொருத்தி உயிருடன் இருக்க அருளினார்.

**18. தக்க யாகத்தைப் பற்றிய செய்தியை தேவார மூவர்கள் பாடியுள்ளனரா?**

ஆம். திருநாவுக்கரசு சுவாமிகள் நான்காம் திருமுறையில் தக்க யாகத்தை அழித்த இறைவனைப் போற்றுகிறார்.

**"உயர் தவமிக்க தக்க னுயர்வேள்வி தன்னி**
**லவியுண்ண வந்த விமையோர்**
**பயமுறு மெச்ச னங்கி மதியோனு முற்ற**
**படிகண்டு நின்ற பயமாய்**
**அயனொடு மாலு மெங்க ளறியாமை யாதி**
**கமியென் றிறைஞ்சி யகல**
**சயமுறு தன்மைகண்ட தழல் வண்ண னெந்தை**
**கழல்கண்டு கொள்கை கடனே". (திருமுறை 4-14-7)**

இதன் கருத்து:-

உயர்ந்தவராகிய தவத்தினைப் புரிந்தவன் தக்கன். அவன் புரிந்த வேள்வியில் (யாகத்தில்) அவிர்பாகத்தினை நாடிவந்த தேவர்களும், பயம் மிகுந்த வேள்விக்கோவும், அக்னி, சந்திரன் முதலானோரும் ஈசனுக்கு அஞ்சி ஓடினர். பிரமனும், திருமாலும் அறியாமையைப் பொறுத்தருளுமாறு வேண்டினர். அத்தகைய ஆற்றல் மிக்க தழல்வண்ணனாகிய பெருமானின் திருக்கழலைக் கண்டு தரிசித்தலே எமக்குக் கடமையாகும்.

**19. இந்தப் புராண வரலாற்றின் மூலம் திருமூலர் நமக்கு உணர்த்தும் செய்திதான் என்ன?**

சிவ நிந்தை பொல்லாது. அறிவின்மை காரணமாகத் தொழுது அவனைப் போற்றாவிட்டாலும் சரி, நிந்தை செய்யாதீர்கள். தக்கனுக்கு நேர்ந்த கதியை நினைவில் கொள்ளுங்கள் என்று உணர்த்துகிறார் திருமூலர். சிவநிந்தை கூடாமையைமேலும்சிலபாடல்களின்மூலம்திருமந்திரம்தெளிவாக்குகிறது.

**"தெளிவுறு ஞானத்துச் சிந்தையின் உள்ளே**
**அளிவுறுவார் அமரர் பதி நாடி**
**எளியன் என்றீசனை நீசர் இகழில்**
**கிளியொன்று பூனையின் கீழதுவாமே. (திரு. 526)**

உலகத்துக்கெல்லாம் முதல்வனாகிய சிவபெருமானின் பெருமைகளை ஓர்ந்து உணர்ந்தவர் பின்னாளில் தேவர்களாவர்.

அப்படி இல்லாமல், அவன் இருப்பிடம், ஆடை, ஆபரணங்கள், பூசும் சாம்பல் இவற்றைக் கருதி எளியவன் என்று இகழ்வாராயின் கிளி ஒன்று தானே

சென்று பூனையிடம் அகப்பட்டுத் துன்பமடைவது போல் ஆகிவிடும். இதற்குத் தக்கன் புராண வரலாறு ஒரு எடுத்துக்காட்டு. இப்பாடல் இறைவனை நேர்ப்பகை கொண்டு இகழ்வார்களுக்கு திருமூலர் தரும் எச்சரிக்கை. பகை கொண்டு இகழ்வாருக்குத் துணை நிற்றலைப் பொய்ப் பகைஎன்று குறிப்பிடுகிறார் திருமூலர். அவர்களும் அழிவை அடைவர் என்கிறது திருமந்திரம்.

**"அப்பகையாலே அசுரரும் தேவரும்**
**நற்பகை செய்து நடுவே முடிந்தனர்**
**எப்பகையாதிலும் எய்தார் இறைவனைப்**
**பொய்ப்பகை செய்யினும் பொன்று பதா மே". (திரு. 528)**

அசுரர்களும் தேவர்களும் இறைவனிடம் நேர்ப்பகை கொண்டவர்கள் அல்லர். ஆயினும் நேர்ப்பகை கொண்டவர்களைத் திருத்தி வழிபடுத்தும் இயல்பினர் அல்லர்.

தக்கன் யாகத்தில் இறைவனிடம் நேர்ப்பகை கொண்டவன் தக்கன். மற்ற தேவாசுரர்களும்,முனிவர்களும், அவனை நல்வழிப்படுத்த முடியாமல் அவனது யாகத்திற்குத் துணை நின்றனர். அன்றோ? அவர்களை பொய்ப்பகை செய்தவர் எங்கிறார் திருமூலர். பகை எத்தன்மைத் தானாலும் அது அழிவிலே தான் கொண்டு விடும் என்பது பாடலின் கருத்து.

**20. தக்கன் வேள்வியைப் பற்றிய புராணச் செய்திகள் திருமந்திரத்தில் மேலும் இடம் பெற்றுள்ளனவா?**

ஆம். மேலே சொன்னபடி மற்றுமுள்ள தேவர்கள் பலரும்,

சிவனாரிடம் பகை பாராட்டாதாராயினும், தக்கனின் செயலைத் தடுத்து முறைப் படுத்த முடியாமல் துணை நின்றதால் எப்படி ஒறுக்கப்பட்டனர் என்பதையும் திருமந்திரம் சொல்கிறது.

**"சத்தி செயக்கண்டு எழுகின்ற அரிதானும்**
**'எந்தை இவன் அல்லம் யாமே' உலகினில்**
**பந்தம் செய் பாசத்து வீழ்ந்து தவம் செய்ய**
**அந்தம் இலானும் அருள் புரிந்தோனே".**

கருத்து: தக்கன் வேள்வியில், வீரபத்திரக் கடவுள், தக்கனுக்கும் மற்றைய தேவர்களுக்கும் அளித்த தண்டனையைக் கண்டு, திருமால்

'நாம் தலைவன் அல்ல, சிவனே எல்லோருக்கும் தலைவன்' என உணர்ந்து அருள் வேண்ட, சிவனும் அவ்வாறே அருள் புரிந்தான்.

**"அரி, பிரமன், தக்கன், அருக்கனுடனே**
**வருமதி, வாலை, வன்னி நல் இந்திரன்**
**சிரம், முகம், நாசி, சிறந்தகை, தோள் தான்**
**அரன் அருளின்றி அழிந்த நல்லோரே".**

கருத்து: அவ்வாறே வீரபத்திரக் கடவுளது கோபத்திற்கு இலக்காகி, திருமால், பிரமன், தக்கன், சூரியன், சந்திரன், ஸரஸ்வதி, அக்னி, இந்திரன் ஆகியோர், தலை, முகம், நாசி, கை, தோள் ஆகிய உறுப்புகளில் ஒன்றை இழந்தனர். திருமால் தலைமைத் தானத்தையும், பிரமனும், தக்கனும் தலையையும், சூரிய சந்திரர் முகத்தையும், ஸரஸ்வதி நாசியையும், அக்னி கையையும், இந்திரன் தோளையும் முறையே இழந்தனர் என்று சிவபுராணம் கூறும்.

**21. இந்த வீரச்செயலைப் போற்றும் தலம் எது. அது எங்குள்ளது?**

மயிலாடுதுறை அருகில் உள்ள திருப்பறியலூர் இந்த வீரட்டச் செயலைப் போற்றும் தலமாகும். தற்காலத்தில் இதை பரசலூர் என்று அழைக்கின்றார்கள். இறைவன் திருநாமம் வீரட்டேசர். இறைவி இளங்கொம்பன்னாள். தக்கன் வேள்வி செய்த இடமாதலின் இத்தலம் ‘தட்சபுரம்’ என்றும் பெயர் பெற்றது.

**22. இந்த ஆலயத்தின் அமைப்பைச் சற்று விரிவாகச் சொல்ல முடியுமா?**

மேற்கு நோக்கி, இரு பிரகாரங்களுடன், அமைந்த திருக்கோயில். ராஜ கோபுரம் இல்லை. வீரபத்திரருக்கு பஞ்சலோகச் சிலை உள்ளது. ஆயுதங்கள் ஏந்திய எட்டு கைகளுடன் அருள் பாலிக்கிறார். பீடத்தின் அடியில் தக்கன் வீழ்ந்த நிலையில் காணப்படுகின்றான். கர்ப்பக்ருஹத்தில் இறைவன் இலிங்கத் திருமேனியுடன் எழுந்தருளியுள்ளார். தக்கன் யாகத்தை இங்கு நடத்தியதாகக் கருதப்படுவதால் தக்ஷபுரீசுவரர் என்றும் பெயருண்டு. கருவறைச் சுவரின் கோஷ்டங்களில் , துர்க்கை, பிரும்மா, தக்ஷிணாமூர்த்தி, கணபதி இவர்களுடன் சிவலிங்கத்தைப் பூசிக்கும் தக்கனும் காணப்படுகின்றனர்.

நான்கு தீர்த்தங்கள் இத்தலத்தில் உள்ளன. உத்தர்வேதி தீர்த்தம், தேவ தீர்த்தம், கமல தீர்த்தம், திக்பாலகர் தீர்த்தம் என்பவை அவை. தல விருட்சம் பலா. உத்தரவேதி தீர்த்தத்தில் நீராடி வீரட்டேசுவரரைப் பூசித்தால், பிணிகள் நீங்கி நீண்ட ஆயுளைப் பெறுவர் என்று இத்தல வரலாறு கூறும்.

**23. இந்தத் தலத்திற்குறிய தேவாரப் பாடல்கள் எதேனும் உண்டா?**

ஆம். திருஞான சம்பந்த சுவமிகள் இத்தலத்து வீரட்டானப் பெருமானைப் போற்றி ஒரு பதிகம் பாடியுள்ளார். அதில் உதாரணத்திற்கு ஒரு பாடலைப் பார்ப்போம்.

**“வளங்கொள் மலர்மே லயன்ஒத வண்ணன்**
**துளங்கும் மனத்தார் தொழத்தழ லாய்நின்றான்**
**இளங்கொம் பனாளோ டிணைந்தும் பிணைந்தும்**
**விளங்குந் திருப்பறியல் விரட்டான த்தானே”. (திருமுறை 1-134-9)**

கருத்து

விளங்குகின்ற ஒண்மலராகிய தாமரையின்மேல் வீற்றிருக்கும் நான்முகனும், கடல் வண்ணனாகிய திருமாலும் தளர்ச்சி கொண்ட மனத்தினராய் அயர்ந்து

தொழுது போற்றிட, அனலாய் ஓங்கி நின்ற பெருமான், இளம்கொம்பு அனையாள் எனும் திருப்பெயர் தாங்கிய உமையொடு உடனாகி இணைந்தும் ஒரு கூறுடைய மங்கை பங்கனாய் பிணைந்தும், திருப்பறியலூர் வீரட்டானத்தில் உறைபவராவர்.

### 24. திருமந்திரம் கூறும் மூன்றாம் வீரச்செயல் என்ன?

சிவபெருமானுடைய வீரச்செயல்களுள் மூன்றாவதாக திருமூலர் கூறுவது பிரமன் தலையைக் கொய்ததாகும். இந்த வரலாறு சிவமஹாபுராணத்தின் ஆரம்பத்தில் விவரிக்கப்படுகிறது.

சிவபெருமானின் திருவடியின் பெருமையை நன்கு அறிந்தவர்கள்தாம் தேவர்கள். இருப்பினும் ஒரு சமயம் செருக்கு மிகக்கொண்டு அவர்கள் ஒவ்வொருவரும் தானே தலைவன் எனக்கூறிக் கொண்டு தமக்குள்ளே வாதிட்டிருந்தனர். அது சமயம் திருமாலும், பிரம்மனும் தாமே முதற்கடவுள் என்ற அகங்காரம் கொண்டு போரிட்டனர். அவர்கள் முன் சிவன் ஒரு பேரொளியாய்த் தோன்றவும், திருமால் அதன் அடியைக் காண இயலாதவராகி வணங்கி நின்றார். பிரம்மனோ, முடியைக் காண இயலாமல் போனாலும், அதை ஏற்றுக் கொள்ளாமல், தான் கண்டு விட்டதாகக் கூறியதால், சிவன் சினங்கொண்டு நெற்றிக்கண்ணிலிருந்து தோன்றிய பைரவர் மூலம், அவரது ஐந்து தலைகளில் ஒன்றை நகத்தினால் கிள்ளி எடுத்துவிட்டார். அன்று முதல் பிரம்மன் நான்கு தலைகள் கொண்டவராய் மாறிவிட்டார். மேலும், அவருக்கு இப்பூவுலகினில் கோவிலும், பூசனையும் இல்லை என்றும், அவருக்குத் துணை நின்ற, தாழம்பூவிற்கு, அருச்சனை செய்யும் அருகதை இல்லை என்றும் சிவன் சாபமிட்டார்.

### 25. இந்த வரலாற்றைக் கூறும் திருமந்திரப் பாடலை விளக்க வேண்டுகிறேன்?

முதலில் திருமாலும் அயனும் சிவனது அடிமுடி தேடிக் காணாது திரும்பியதைக் கூறும் பாடலைப் பார்போம்.

**“அடிமுடி காண்பார் அயன் மால் இருவர்**
**படி கண்டிலர் மீண்டும் பார்மிசைக் கூடி**
**அடி கண்டிலேன் என்றச் சுதன் சொல்ல**
**முடி கண்டேன் என்றயன் பொய் மொழிந்தானே”. (திரு. 373)**

கருத்து: திருமாலும் பிரமனும் தானே பெரியவர் என்று வாதிட்டபோது சிவபெருமான் அவர்கள்முன் பேரொளிப் பிழம்பாய்த் தோன்றினான். மாலும் பிரமனும் சிவசோதியின் அடியையும், முடியையும் காண முயன்றும் காண முடியவில்லை. மீண்டும் திரும்பி வந்து திருமால் ‘அடி கண்டிலேன்’ என்று உண்மையைக் கூறினார். பிரமனோ ‘தான் முடியைக் கண்டேன்’ என்று பொய்யுரை செய்தான். அதனால் பிரமனுக்குத் தக்க பாடம் புகட்ட வேண்டி அவனுடைய ஐந்து தலைகளில் ஒன்றைக் கிள்ளி எடுத்ததைக் கீழ்வரும் பாடல் விளக்குகிறது.

**"எங்கும் பரந்தும் இருநிலந்தாங்கியும்**
**தங்கும் படித்தவன் தாளுணர் தேவர்கள்**
**பொங்கும் சினத்துள் அயந்தலை முன் அற**
**அங்கச்சுதனை உதிரங்கொண்டானே". (திரு. 341)**

பாடல் கருத்து:- சிவபெருமானது திருவடி எங்கும் வியாபித்துள்ளது. பூமியைத் தாங்குவதும், அனைத்து உயிரிலும் உட்பொருளாய் இருப்பதுவும் அதுதான். தேவர்களுக்கு இது தெரிந்திருந்தும் பிரமன் செருக்குக் கொண்டமையால், சிவனார் அவரது தலையைக் கிள்ளி, அந்தக் கபாலத்தில் திருமாலின் இரத்தத்தை இரந்து ஏற்றார். பிரமனின் தலையைக் கொய்தபின், விரல் நுனியில் ஒட்டிக்கொண்ட அந்தக் கபாலம் கீழே விழ மறுத்தது. பலரிடமும் சென்று பலவாறான பிக்ஷையை ஏற்றும்கூட அது கீழே விழவில்லை. கடைசியில் திருமால் தன் உதிரத்தையே பிக்ஷயாக ஈர்ந்த போது அந்தக் கபாலம் கீழே விழுந்தது. வெவ்வேறு புராணங்களில் இந்தக் கதை சிறு சிறு மாற்றத்துடன் காணப்படுகிறது.

எனினும் மையக்கருத்து ஒன்றுதான். நான் என்ற அகந்தை சைவ நெறியில் அழிக்கப்படவேண்டிய ஒன்று என்பதே அது.

**26. இந்தப் புராணச் செய்தியின் மூலம் திருமந்திரம் நமக்கு உணர்த்துவது என்ன?**

வாய்மை என்பது சிவநெறியைச் சார்ந்தாருக்கு இன்றியமையாதது, என்பதை முதலாவதாக உணர்த்துகிறது இப்பாடல்.

பிரமன் பொய் கூறத்தலைப் பட்டதால் துன்பமடைந்தது உதாரணம். வாய்மையை வலியுறுத்தும் திருமந்திரப்பாடல் இதோ:-

**"கை கலந்த என்னக் கருத்தினுள் நந்தியை,**
**மெய் கலந்தான் தன்னை வேத முதல்வனைப்**
**பொய் கலந்தார்முன் புகுதாப் புனிதனைப்**
**பொய் யொழிந்தார்க்கே புகலிடமாமே". (திரு. 2604)**

பாடலின் கருத்து: வேத முதல்வனான சிவன், ஒவ்வொருவருடைய உடலிலேயே மூலாதாரத்தில் விளங்குபவன். மனத்தோடு உடலிலும், உள்ளத்தினும் உறைபவன். அதனை அறியாமல் பொய்யான பொருட்களிலே கலந்திருப்பாரிடம் வெளிப்படாதவன். பொய் ஒழிந்த தன்மை யுடையார்க்கு தஞ்சம் அளிப்பவன். ஆகவே பொய்யை நீக்கி மெய்ப்பொருளை நாடுமின் என்பது கருத்து.

***27. பொய்ப் பொருள், மெய்ப்பொருள் என்றெல்லாம் சொல்கிறீர்களே. அது என்ன?***

நம் அன்றாட வாழ்க்கையிலே நாம் சிறு சிறு பொய்கள் கூறுகிறோம் அல்லவா? ஒரு காரியம் செய்துவிட்டு அதைச் செய்யவில்லை என்று

சொல்வது, அல்லது செய்யாததைச் செய்ததாகக் கூறுவது, இருப்பதை இல்லை என்றும் இல்லாததை இருப்பதாகவும் கூறுவது, இது போன்றவை சிறு பொய்கள். திருமூலர் குறிப்பிடுவது அதுவல்ல. நிலையற்ற உலக வாழ்க்கையையும், சுற்றத்தாரையும், பணம் பதவியையும் நிலையானது என்று நம்பிக் கொண்டிருக்கிறோமே, அது பெரும்பொய். அதை நம்பி மெய்ப்பொருளை நாடாமல் வாணாளை வீணாகக் கழித்தலை வெறுக்கிறார் திருமூலர்.

இரண்டாவதாக அறிவினால் இருமாப்புடன் இருப்பவர்களும் சிவனை அடைய இயலாது என்று உணர்த்துகிறது இப்புராண வரலாறு. மும்மூர்த்திகளில் முதலாமவர் பிரும்மா. படைப்புக் கடவுள். நான்முகன். நான்கு முகங்களும் நான்கு வேதங்களின் இருப்பிடம். யாகங்களில் தலைமை ஏற்று நடத்துபவரை பிரும்மா என்று அழைப்பார்கள். அவர் எல்லா சாஸ்திரங்களுக்கும் உற்பத்தி ஸ்தானம். அறிவின் உறைவிடம். ஆனால் எல்லா அறிவும் இருந்தும் என்ன பயன்? அவையெல்லாம் பரம்பொருளின் முடியைக் காண, பிரும்மாவுக்குப் பயன்படவில்லையே?

**"எல்லாம் அறியும் அறிவுதனை விட்டு**
**எல்லாம் அறிந்தும் இலாபம் அங்கில்லை;**
**எல்லாம் அறிந்த அறிவினை நானென்னில்**
**எல்லாம் அறிந்த இறையென லாமே". (திரு. 2596)**

கருத்து:-

எல்லாவிதமான வித்தைகளையும் ஒருவன் அறிந்துவைத்திருந்தாலும் அதனால் பயன் ஒன்றும் இல்லை. இந்த அறிவுக்கு எல்லாம் மேலான அறிவு ஒன்று உள்ளது. அதை அறிந்தாயாகில், உனக்கு எல்லாம் அறியும் பேறு கிட்டும். அதுதான் சிவன் என்கிற பேரறிவு. பதிஞானம் என்று சைவ சித்தாந்தத்தில் அதைக் கூறுவார்கள்.

மூன்றாவதாக நான், எனது என்ற உணர்வுகள் பாசத்திற்கு அடிப்படை. அவை அழிந்தாலொழிய சிவனை அடைய இயலாது. திருமூலர் தனது சிவபோக அனுபவத்தைக் கூறும் அழகைக் கீழ்வரும் படலில் காணலாம்.

**"தானும் அழிந்து தனமும் அழிந்த நீடு**
**ஊனும் அழிந்து உயிரும் அழிந்துடன்**
**வானும் அழிந்து மனமும் அழிந்து பின்**
**நானும் அழிந்தமை நானறியேனே". (திரு. 2951)**

கருத்து: தான், தனது என்ற உணர்வுகள்தான் ஆன்ம ஞானத்திற்குப் பெருந்தடை. தனம் என்றது செல்வம். வீடு, வாகனம், நிலம், பதவி, பொன், புகழ், உறவினர் அனைத்துமே. இவைகளை அனுபவிப்பது இந்த உடல். தான் என்பது இந்த உடல் என்ற மயக்கம் அழிதல் வேண்டும். உயிராகிய பிராணன் தான், தான் என்ற உணர்வும் அழிதல் வேண்டும். நான் மனமுமல்ல, பஞ்சபூதங்களும் அல்ல. என்று தெளிய வேண்டும்.

இவ்வளவும் அழிந்தபின் நான் எங்கே? எனக்கே அறியாமல் என்னை சிவமாகிய பரம்பொருளில் இழந்தேன் என்கிறார் திருமூலர். நான் என்ற எண்ணம் மேலோங்கி நின்றதால் பிரும்மா சிவத்தை உணரவில்லை என்பதை இக்கதை எடுத்துக் கூறும்.

**28. இந்த வீரச்செயலைப் போற்றும் தலம் எது? அது எங்குள்ளது?**

இந்த வீரட்டானத்தலம் திருக்கண்டியூர் எனப்படும். தஞ்சை மாவட்டம் காவிரியின் வடகரையில் உள்ள தலமாகும். தஞ்சாவூரிலிருந்து திருவையாற்றுக்கு செல்லும் மார்க்கத்தில் திருவையாற்றுக்கு இரண்டு கி.மீ. தொலைவில் முன்பாகவே அமைந்துள்ளது கண்டியூர். பிரமனுக்கு பாடம் புகட்டிய தலமாதலால் பிரமபுரி என்றும் அழைக்கப்படுகிறது. இந்தக் கோயிலுக்கு அருகிலேயே, சாபவிமோசனப் பெருமாள் என்ற விஷ்ணுக் கோயிலும் உள்ளது.

**29. இந்த ஆலய அமைப்பின் சிறப்பைப் பற்றிச் சற்று விளக்குங்களேன்.**

மேற்குப் பார்த்த திருக்கோயில். ஐந்து நிலை கொண்ட ராஜகோபுரம். வீரட்டானேஸ்வரர் லிங்கத்திருமேனியுடன் மேற்கு பார்த்து அருள் பாலிக்கிறார். அம்பாள் மங்களநாயகி. தெற்கு பார்த்த சந்நிதி. இரண்டு பிராகாரங்கள். இரண்டாவது பிராகாரத்தில் துர்க்கைக்கு அருகாமையில் கிழக்கு நோக்கி பிரம்மா- ஸரஸ்வதியின் திரு உருவங்கள். நான்கு திருமுகங்களுடன் தனது ஐந்தாவது தலையை இழந்த நிலையில் பிரம்மா காட்சியளிக்கிறார். பிரம்மாவின் தலையைத் துண்டித்த பாவத்திற்கு பரிகாரமாகத் தவம் செய்யும் கோலத்தில் பத்ம பீடத்தில் அமர்ந்திருக்கும் சிதிலமடைந்த, ஆனால் கலையழகு நிரம்பிய சிற்பம் ஒன்றும் உள்ளது. கலையுணர்வுடன் பார்த்து ரசிக்க வேண்டிய சிற்பங்கள் நிறைந்த கோவில் இது.

**30. இந்தத் திருத்தலத்திற்குரிய தேவாரப் பாடல்கள் ஏதேனும் உண்டா?**

ஆம். அப்பர் சுவாமிகள் இந்த வீரட்டானப் பெருமானைப் போற்றி ஒரு பதிகம் பாடியுள்ளார்கள். அதில் உதாரணத்திற்கு ஒரு பாடலைப் பார்ப்போமா?

> **"பண்டங் கறுத்ததோர் கையுடை யான் படைத் தான்தலையை**
> **உண்டங்கறுத்ததும் ஊரொடு நாடவை தானறியும்,**
> **கண்டங்கறுத்த மிடறுடை யான்கண்டி யூரிருந்த**
> **தொண்டர் பிரானைக் கண்டீரண்ட வாணர் தொழுகின்றதே".**
> **(திருமுறை 4-93-3)**

கருத்து:-

ஈசன் யானையின் தோலை உரித்தவர்; பிரமனின் தலையைக் கொய்தவர்; நஞ்சினை உண்டு கறுத்த மிடறுடையவர்; அண்டவாணராய் கண்டியூரில் வீற்றிருப்பவர்; தொண்டர்களால் ஏத்திப் போற்றப் படுபவர். அப்பெருமானைக் கண்டு மகிழ்ந்தவர்களை என் மனம் தொழுது போற்றுகின்றது.

### 31. திருமந்திரம் கூறும் நான்காவது வீரச்செயல் என்ன?

சிவபெருமானுடைய எட்டு வீரச் செயல்களுள் நான்காவதாக திருமந்திரம் கூறுவது ஜலந்திரன் வதம். இந்தக் கதை சிவபுராணம் மற்றும் கந்தபுராணத்திலும், லிங்க மஹா புராணத்திலும் விவரிக்கப்பட்டுள்ளது. சமுத்திர ஜலத்தினால் தரிக்கப் பட்டவன் அல்லது தாங்கப்பட்டவன் என்பதினால் அந்த அசுரனுக்கு ஜலந்திரன் என்று பெயர். சிவபெருமானையே எதிர்த்துப் போரிடத் துணிந்த அந்த அசுரனை சிவபெருமான், மறக்கருணையால் ஆட்கொண்ட வரலாறுதான் இது.

### 32. அந்தப் புராணக்கதையைச் சற்று விரித்துக் கூறுங்களேன்?

இந்திரன் ஒரு முறை சிவனைக் காண கைலாயம் சென்றிருந்தார். போகும் வழியில் மாற்று உருவத்தில் அவனை வரவேற்ற சிவனை அடையாளம் கண்டு கொள்ளாமல் இகழ்ந்தார். சினம் கொண்ட சிவனின் கோபாக்னி, மேலைக் கடலுக்குள் சென்று அடைக்கலம் புகுந்த்து. இந்திரன் சிவன் கோபத்திற்கு ஆளாகாமல் தப்பித்தார். கடல் நீர் தாங்கிய சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து வெளிப்பட்ட கோபக்கனல் ஒரு அசுரனாக உருவெடுத்தது. ஜலந்தரன் என்ற பெயருடன், பிரம்மனைக் குறித்து கடுந்தவமிருந்து மிக்க வலிமை பெற்று விளங்கினான்.

தேவர்கள், இந்த அசுரனுடைய தொல்லை பொறுக்க மாட்டாதவர்களாய் கயிலையில் அடைக்கலம் புகுந்தனர். சலந்தரன் அவர்களைத் துரத்திச் சென்று கயிலையைப் பெரும்படையுடன் முற்றுகையிட்டான். அவனுடைய ஆற்றலைச் சோதிக்கும் எண்ணத்தில் சிவபெருமான் அந்தணர் உருவில் ஜலந்தரன் முன் தோன்றி, நிலத்தில் கால் விரலால் ஒரு சக்கரம் குறித்து அதனை முடிந்தால் தூக்கும்படி கேட்டுக் கொண்டார். அதைச் செய்தால் ஜலந்தரன் கயிலையை வெற்றி கொள்ளும் திறன் படைத்தவன் என்று உறுதியாகும் எனக் கூறவும், அவன் அச்சக்கரத்தைத் தன் தலை மேல் தூக்கும் போது அச்சக்கரம் அவனை இருகூறாக்கி அழித்தது என்பது புராணச் செய்தி.

### 33. திருமந்திரம் இந்தப் புராணச் செய்தியை எப்படி விவரிக்கிறது?

இந்த வரலாற்றைக் கூறும் திருமூலர் பாடல் இதோ :-

**"எங்கும் கலந்தும் என்உள்ளத் தெழுகின்ற**
**அங்க முதல்வன் அருமறை யோதி பாற்**
**பொங்குஞ் சலந்தரன் போர் செய்ய நீர்மையின்**
**அங்கு விரற்குறித் தாழி செய்தானே".** **(திரு. 342)**

பாடலின் கருத்து:-

எல்லா இடங்களிலும் நிறைந்து விளங்கும் இறைவன் என் உள்ளத்திலும் உறைகின்றான். அவன் வேதங்களுக்கும், ஆகமங்களுக்கும் முதல்வன். கோபத்தின் உருவமான சலந்தரன் கடல் நீரை இருப்பிடமாகக் கொண்டு

சிவபெருமானுடன் போர் செய்த போது சிவன் கால் விரலால் குறித்த சக்கரமே அவனை அழித்தது.

**34. இதன் மூலம் திருமூலர் நமக்குப் போதிக்கும் அறிவுரை என்ன?**

முக்கியமான செய்தி ஒன்றைத் திருமந்திரம் இந்தப் புராணத்தின் மூலம் நமக்கு உணர்த்துகிறது.

அது, கோபம் ஒருவனுடைய ஆன்மீக வளர்ச்சிக்கு மிகப் பெரிய தடை. கோபத்தை ஒருவன் அறவே ஒழித்தால் தான் இறைவனை நோக்கி முன்னேற முடியும்.

சிவனாருடைய கோபம் எங்கிற தீ கடலில் எறியப்பட்டும் ஒரு அசுரனாக, உருவெடுத்தது. அது போலவே எல்லா சீவர்களுக்கும் கோபம் என்கிற தீ, அந்த நிலை கடந்து போன பிறகும், ஒரு அசுரனைப் போல வளர்ந்து தீமைகளைப் பயக்கக் கூடியது. அந்த சலந்தரன் பின்னர் சிவனாரையே எதிர்க்கத் துணிந்தான் அல்லவா? அது போல நம்முடைய கோபம் நம்மையே அழிக்கத் துணியும். ஆகவே கோபத்தை அறவே ஒழித்துவிடுதல் தான் ஒரே வழி, சிவனார் சலந்தரனை அழித்தது போல.

மஹாநாராயண உபநிடதம் இறைவனிடம் தான் கோபத்தினால் செய்த பாவங்களைப் பொறுத்தருளும்படி வேண்டும் தோத்திரம் ஒன்றைக் கூறுகிறது. கோபத்திற்கு வடமொழியில் ‘மன்யு’ என்று பெயர்.

**“மன்யுரகார்ஷீன் நமோ நம: |**
**மன்யுரகார்ஷீன் மன்யு: கரோதி**
**நாஹம் கரோமி மன்யு: கர்த்தா**
**நாஹம் கர்த்தா மன்யு: காரயிதா**
**நாஹம் காரயிதா ஏஷதே**
**மன்யோ மன்யவே ஸ்வாஹா” ||**

இந்த மந்திரத்தின் கருத்து:

இறைவனே உனக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரங்கள். நான் செய்த பிழைகள் எல்லாம் கோபம் செய்தது. நான் செய்யவில்லை. கோபமே செயலாளி. நான் செயலாளி அல்ல. கோபமே செய்விக்கிறது. நான் செய்விப்பவன் அல்ல.

ஏ மன்யு தேவதையே, உனக்கு இந்த வேள்வியைச் செய்கிறேன். என்னை உன் பிடியிலிருந்து விடுவிப்பாயாக !

ருக் வேதத்தின் பத்தாவது மண்டலத்தில் 83,84 பகுதிகளில் கோபத்தையே ஒரு தேவதையாக உருவகித்து அதைப் போற்றும் பாடல்கள் உள்ளன. கோபத்தின் வசம் போகாமல் கோபத்தை தன்வசமாக்கும் பிரார்த்தனை இது. ‘’மன்யு சூக்தம்’ என்று இதன் பெயர்.

சிவநெறியில் நாட்டம் கொண்டவர்கள் தவிர்க்க வேண்டிய குணங்களில் சினம் முதன்மையானது என்பதைக் கீழ்க்கண்ட திருமந்திரப்பாடல் எடுத்தியம்பும்.

**"கன்றலும் கருதலும் கருமம் செய்தலும்**
**தின்றலும் சுவைத்தலும் தீமை செய்தலும்**
**பின்றலும் பிறங்கலும் பெருமை கூறலும்**
**என்றிவை இறைபால் இயற்கை அல்லவே". (திரு. 1686)**

கன்றல்- சினம் கொள்ளுதல். இறையன்பை விரும்புவர்களுக்கு இயல்பாகவே இருக்கக் கூடாத பண்புகளை பட்டியலிடுகிறது இப்பாடல்.

சினத்தல், வீண் சிந்தனை, எப்போதும் செயலில் ஈடுபட்டிருத்தல், தின்னுதல், சுவைத்தல், தீங்கு செய்தல், குறைபடுதல், நிறைவு படுதல், தற்பெருமை என்ற இவை கூடாத பண்புகளாம்.

திருமூலர் காமம், வெகுளி, மயக்கம் இம்மூன்றையும் முக்குற்றம் என்று தெளிவு படுத்தி அவைகளிலிருந்து விடுபடாதவர், மாயையில் துன்புற்று அழிவர் என்று விளக்குவார்.

**"மூன்று உள குற்றம், முழுதும் நலிவன**
**பான்று இருள் தூங்கி, மயங்கிக் கிடந்தன**
**மூன்றினை நீங்கினர் நீக்கினர்; நீங்காதார்**
**மூன்றினுள் பட்டு முடிகின்றவாறே". (திரு. 2435)**

காமம், வெகுளி, மயக்கம் என்ற முக்குற்றங்கள் உயிர்களுக்குத் துன்பத்தைத் தருவன. சீவன் தன் ஆன்ம ஸ்வரூபத்தை அறியமாட்டாமல் செய்வன. இவைகளிலிருந்து விடுபட்டவர் பிறப்பு, இறப்புச் சூழலிலிருந்து நீங்குவர். அப்படி விடுபடாதவர் மாயையில் துன்புற்று அழிவர் என்பது கருத்து.

### 35. இந்த வீரச்செயலைப் போற்றும் திருத்தலம் எது? எங்குள்ளது?

திருவாரூர் மாவட்டத்திலுள்ள திருவிற்குடி என்னும் தலம், ஜலந்தர வதத்திற்குறிய தலமாகும். காவிரியின் தென் கரையில் நன்னிலம் தாலுக்காவில் அமைந்த சிற்றூர். இறைவன் வீரட்டானேசுவரர். இறைவி ஏலவார்குழலி அம்மை.

### 36. இந்த ஆலயச் சிறப்பைப் பற்றிக் கொஞ்சம் தெரிந்து கொள்ளலாமா?

மேற்கு நோக்கி அமைந்திருக்கும் திருக்கோயில். முகப்பில் அழகிய ராஜகோபுரம். இரண்டு பிராகாரங்கள். தெற்கு நோக்கியிருக்கும் அம்பாள் சன்னிதி. கர்ப்ப கிருஹத்தில் உள்ள இறைவன் இலிங்கத் திருமேனியுடன் காட்சி தருகிறார். ஜலந்தர ஸம்ஹாரமூர்த்தி உற்சவராக அருள் பாலிக்கிறார். ஞானதீர்த்தம், சங்கு தீர்த்தம், சக்கர தீர்த்தம் என்று மூன்று புண்ணிய தீர்த்தங்கள் உள்ளன.

## 37. இத் திருத்தலத்திற்குரிய தேவாரப் பாடல்கள் உள்ளனவா?

ஆம். திருஞானசம்பந்தர் இத்தலப் பெருமானைப் புகழ்ந்து ஒரு பதிகம் பாடியுள்ளார்.

இந்தப் பதிகத்தில் இந்த வீரட்டானத்திற்குரிய வீரச்செயல் குறிப்பிடப்படவில்லை என்றாலும் வேறு ஒரு பாடலில் இந்தப் புராணச் செய்தி

குறிப்பிடப்படுவதைக் காணலாம்.

**"தன்றவம் பெரிய சலந்தர னுடலந்**
**தடிந்தசக் கரமெனக் கருளென்**
**றன்றரி வழிபட் டிழிச்சிய விமானத்**
**திரையவன் பிரையணி சடையன்**
**நின்றநாள் காலை யிருந்த நாள் மாலை**
**கிடந்தமண் மேல்வரு கலியை**
**வென்றவே தியர்கள் விழாவறா வீழி**
**மிழலையா னென்வினை கெடுமே". (திருமுறை 3-119-7)**

கருத்து:-

சிவபெருமானின் நல்லருளால் தோன்றிய சக்கரப்படையைப் பெறுவதன் பொருட்டு, விண்ணிலிருந்து விமானத்தைக் கொண்டு வந்து பூசித்தவர் அரி. அச் சிறப்பு கொண்ட தலமானது எல்லாக்காலத்திலும் மண்ணுலகத்தின் சேர்க்கையால் உண்டாகும் துன்பத்தை அந்தணர்கள் விளங்குகின்ற திருவீழிமிழலையில் விழாக்கள் தொடர்ந்து நிகழும், இத்தலத்தில் உறையும் பெருமானின் திருப்பெயரைக் கூற வினை ஒடும்.

அப்பர் சுவாமிகளும் கொட்டையூர் பதிகத்தில் சலந்தர வதத்தை குறிப்பிடுகிறார்.

**"அக்கரவம் அரைக்கசைத்த அம்மான் கண்டாய்**
**அருமறைகள் ஆறங்கமானான் கண்டாய்**
**தக்கனது பெருவேள்வி தகர்த்தான் கண்டாய்**
**சதாசிவன் காண் சலந்தரனைப் பிளந்தான் கண்டாய்**
**மைக்கொண் மயில் தழை கொண்டு வரு நீர்ப்பொன்னி**
**வலஞ்சுழியான் கண்டாய் மழுவன் கண்டாய்**
**கொக்கமரும் வயல் புடைசூழ் கொட்டையூரில்**
**கோடீச்சரத்துறையும் கோமான் தானே". (திருமுறை 6-73-5)**

கருத்து:- சிவபெருமான் எலும்பும் அரவமும் ஆபரணமாக உடையவர்; வேதமும் அங்கமும் ஆனவர். தக்கன் செய்த வேள்வியைத் தகர்த்தவர். சதாசிவமூர்த்தியானவர்; சலந்தராசுரனை பிளந்தவர்; அவரே காவிரிக் கரையில் மேவும் வலஞ்சுழியில் மழுப்படை உடையவராய் விளங்குபவர். கொட்டையூரில் திகழும் கோடீச்சரத்தில் உறையும்தலைவர் ஆவார்.

மேலும் திருப்புத்தூர் திருத்தாண்டகத்தில் இதனைக் குறிப்பிகிறார்.

**"உரன்மதித்த சலந்தரன்தன் ஆகங் கீண்ட**
**வோராழி படைத்தவன்காண் உலகு சூழும்**
**வரம்மதித்த கதிரவனைப் பற்கொண் டான்காண்**
**வானவர்கோன் புயம்நெரித்த வல்லா ளன்காண்**
**அரம்மதித்துச் செம்பொன்னி வாரம் பூனா**
**அணிந்தவங்காண் அலைகடல்சூழ் இலங்கை வேந்தன்**
**சிரம்நெரித்த சேவடிகாண் திருப்புத்தூரில்**
**திருத்தளியான் காண் அவனென் சிந்தை யானே".**

**(திருமுறை 6-76-10)**

கருத்து:- தமது வலிமையையே பெரிதாக மதித்த சலந்தரன் உடலம் தடிந்த சக்கரப் படையைத் தோற்றுவித்தவர் சிவபெருமான். உலகுசூழும் சூரியனின் பற்களை தட்சயாகத்தில் உகுத்தவர். இந்திரனின் தோளை நெரித்தவர். பாம்பை அணிகலனாகவும், மாலையாகவும் கொண்டவர். இலங்கை அரசன் இராவணின் தலையை நெரித்தவர். திருப்புத்தூரில் மேவும் திருத்தளிநாதர் என் சிந்தையிலுள்ளார்.

## 38. திருமூலர் அடுத்ததாக எடுத்துக் கூறும் வீரச்செயல் என்ன?

திருமந்திரத்திலே அடுத்து வருவது திரிபுரத்தை எரித்தது. இந்தப் புராணக்கதை எல்லோரும் அறிந்த ஒன்றுதன். பல புராணங்களிலும் விரிவாகக் கூறப்பட்ட ஒன்று.

தாரகாசுரனுக்கு மூன்று மகன்கள். தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன்மாலி என்று பெயருடையவர்கள் தாரகாசுரன் முருகப் பெருமானால் வீழ்த்தப்பட்ட பின் அவன் மனைவி மூன்று மகன்களையும் பாதாள உலகம் கொண்டு சென்று அருமையாக வளர்த்து வந்தாள். சுக்ராச்சாரியாரிடம் கல்வியில் தேர்ச்சி பெற்ற பிறகு அவர்கள் மேருமலைக்குச் சென்று பிரம்மாவைக் குறித்துத் தவம் செய்து வரங்கள் பல பெற்றனர். குறிப்பாக, தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன்மாலி முறையே தங்கம், வெள்ளி, இரும்பு இவற்றால் ஆன கோட்டையைப் பெற்று அதில் வசித்து வந்தனர். தங்கள் தந்தையின் அழிவுக்குக் காரணமான தேவர்களிடம் தீராப்பகை கொண்டு அவர்களைத் துன்புறுத்தி வந்தனர். மயன் உதவியால் நிர்மாணிக்கப்பட்ட அந்தக் கோட்டைகள் நினைத்த மாத்திரத்தில் நினைத்த இடத்திற்குப் பறந்து செல்லும் சக்தியுடையவை. அந்த அசுர்ர்கள் இந்த சக்தியைப் பயன்படுத்தி உலகம் முழுவதும் பேரழிவை ஏற்படுத்திக் கொண்டிருந்தனர். பிரும்மாவிடம் பெற்ற வரத்தின் பலத்தால் அவர்களை எதிர்க்க சாதாரண தேர், வில், அம்பு போன்றவை பயனில்லாமல் போயின. ஆகவே தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி சிவபெருமான் ஒரு உத்தி செய்தார். பூமியைத் தேராகவும், வேதங்களை நான்கு குதிரைகளாகவும், பிரம்மனைச் சாரதியாகவும் கொண்டு போருக்குக் கிளம்பினார். மேரு மலையை

வில்லாகவும், வாசுகியை நாணாகவும், தாங்கி சிவன் உதிர்ந்த கோபச் சிரிப்பினாலேயே அந்த முப்புரங்கள் எரித்து சாம்பலாயின. இது இலிங்க புராணம், சிவபுரானம் இவை விவரிக்கும் வரலாறு.

**39. திருமந்திரப் பாடலில் இந்தச் செய்தி எவ்வாறு சித்தரிக்கப் பட்டுள்ளது என்பதைப் பார்க்கலாமா?**

இந்தப் புராணச் செய்தியை விவரிக்கும் திருமந்திரப் பாடல் இதோ !

**"அப்பனி செஞ்சடை ஆதி புராதனன்**
**முப்புரஞ்செற்றனன் என்பர்கள் மூடர்கள்**
**முப்புரமாவது மும்மல காரியம்**
**அப்புரம் செய்தமை யாரறிவாரே." (திரு. 342)**

பாடலின் கருத்து:-

கங்கை நீரைத் தலையிலே அணிந்துள்ளவன். சிவந்த சடையுடன் கூடிய சிவபெருமான் மூன்று கோட்டைகளை அழித்தான் என்று சொல்வார்கள். உண்மையில் மூன்று கோட்டைகள் என்பது ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று மலங்கள் ஆகும். சிவனார் அவ்வாறு அழித்ததை அறியவல்லவர் யார்? அந்த உண்மையை அறிந்து ஒழிகினால் சிவப்பேற்றை அடையலாம் என்பது கருத்து.

**40. இந்தப் புராணச் செய்தியின் மூலம் திருமூலர் நமக்குக் கூறும் அறிவுரை என்ன?**

மும்மலங்களை அழிப்பதன் முக்கியத்துவத்தை பாடலிலேயே திருமூலர் கூறுகிறார். இதை முழுதும் புரிந்து கொள்வதற்கு முதலில் மும்மலங்களைப்பற்றிய அறிவு தேவை. ஏற்கனவே சொன்னபடி ஆணவம், கன்மம், மாயை என்பவை அந்த மூன்று மலங்கள், மலங்களின் தொகையைப் பாசம் என்று கூறுவர். இந்தப் பாசத்தினை அகற்றினால் தான் பசுவாகிய சீவன் பதியைப் பற்ற முடியும்.

**பசுப்பல கோடி பிரமன் முதலாய்ப்**
**பசுக்களைக் கட்டிய பாசம் மூன்றுண்டு**
**பசுத்தன்மை நீங்கியப் பாசமறுத்தாற்**
**பசுக்கள் தலைவனைப் பற்றிவிடா வே. (திரு. 2406)**

மலத்தினால் அல்லது அழுக்கினால் சூழப்பட்டிருக்கும் தன்மையே பசுத்தன்மை எனப்படும். பிரமன் முதல் புழு, பூச்சிகள் வரை அனைத்து சீவன்களும் இந்த பாசத்தால் பிணையுண்டே பிறக்கின்றன. அதிலிருந்து விடுபடுதல்தான் மோட்சத்திற்கு வழி. பதி இயல்பாகவே பாசத்தின் தொடர்பு சற்றும் அற்றது.

ஒரு உதாரணம் சொன்னால் எளிதில் விளங்கும்.

தங்கம், இரும்பு இரண்டும் உலோகங்களே. இருப்பினும் அவற்றுள் வேற்றுமையுண்டு. தங்கத்தில் துரு பிடிக்காது. இரும்பு துருப்பிடிக்கும் தன்மையது. அதுபோல பதியும், பசுவும் அநாதி. நித்தியப் பொருளாயினும், பதி தங்கத்தைப் போன்று அநாதியாகவே மல சம்பந்தப் படாத பொருள். பசுக்களோ அநாதியாகவே மல சம்பந்தமுடைய பொருள்.

**41. இந்த மூன்று விதமான மலங்கள் எத்தகையன? அவற்றுள் என்ன வேறுபாடு?**

ஆணவம் என்பது உயிர்களைப் பற்றி அநாதியாகவே இருக்கும் தன்மையது. இது ஆன்மாக்கு இயல்பாகவே இருப்பதால் இதை சகஜ மலம் என்றும் குறிப்பிடுவர்.

அணு என்ற பதத்திலிருந்து ஆணவம் வந்தது. அணுத்தன்மை என்று பொருள். ஒவ்வொரு சீவனும் தான் அபூர்ணன். முழுமையற்றவன், சிறுமையுடையவன் என்ற உணர்வோடுதான் பிறப்பெடுக்கிறான். இப்படி ஆணவ மலம் மட்டுமே உடைய ஞானிகள் விஞ்ஞான கலர் என்றழைக்கப்படுவர். ஆணவம் என்ற சொல்லுக்கு அகந்தை என்றும் ஒரு பொருள் உண்டு. ஆனால் இங்கு அந்தப் பொருள் இல்லை.

கன்மம், மாயை இவ்விரண்டு மலங்களும் பின்னே வருவன. இவைகளை ஆகந்துகமலம் என்று சித்தாந்திகள் கூறுவர். ஆகந்துகம் என்றால் பின்னே வந்து சேர்வன என்று பொருள். மாயா மலம் என்பது மாயையினால் உண்டாக்கப்படும் பாசத்தளை. அது ஆத்மாவுக்கு பூத உடலையும், சூக்கும உடலையும் கூட்டிவைக்கும். ஒரு சீவனுக்கும், மற்றொரு சீவனுக்கும் உள்ள வேற்றுமை உணர்வை உண்டாக்குவது இந்த மாயையே. ப்ரபஞ்சத்திலுள்ள வேற்றுமை களுக்கும் இந்த மாயையே காரணம். ஆணவ மலமும், மாயாமலமும் உடைய மஹாத்மாக்கள் பிரளய கலர் என்று அழைக்கப்படுவர்.

கன்ம மலம் என்பது அவரவர்கள் இப்பிறவியிலோ, முற்பிறப்புகளிலோ செய்த நல்வினை, தீவினைகளின் கூட்டம். ஒவ்வொரு சீவனும் பிறக்கும்போதே கர்மேந்திரியங்கள் ஞானேந்திரியங்கள் எனப்படும் புலன்களுடனேதான் பிறக்கிறார்கள்.அவைகள் மூலம்ஆற்றப்படும் செயல்கள் இன்ப துன்பங்களுக்குக் காரணமாக அமையும். கன்ம வினையை மூன்றாகப் பிரித்து சஞ்சிதம், ப்ராரப்தம், ஆகாமியம் என்று வழங்குவர்.

சஞ்சிதம் என்பது ஏற்கனவே செய்த வினைகளின் தொகுப்பு. ப்ராரப்தம் என்பது, அவைகளிலே இந்தப் பிறவியில் பயன் தந்து கொண்டிருக்கும் வினைகள். ஆகாமியம் என்பது இப்பிறவியில் செய்யும் வினைகளின் பலாபலன்கள்.

இப்போது மூன்று மலங்களைப் பற்றிப் புரிந்திருக்கும் என நினைக்கிறேன். இவைகளை நீக்கும் அவசியத்தை திருமந்திரம் இவ்வாறு கூறுகிறது.

**“தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள்**
**முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பார்கள்**
**பின்னை வினையைப் பிடித்துப் பிசைவார்கள்**
**சென்னியின் வைத்த சிவனருளாலே”. (திரு. 2611)**

பாடலின் கருத்து:

தான் யார் என்ற ஆன்ம ஞானம் பெற்ற தத்துவ ஞானிகள் முற்பிறவிகளில் செய்த வினைகளின் மூட்டையை முடிச்சு அவிழ்த்து ஓடச் செய்வர். பின்னே வர இருக்கும் வினையை ஆரம்பத்திலேயே அதன் விளைவறிந்து பிசைந்து ஒடுக்கி விடுவர். இப்பிறவியில் செய்யும் செயல் அனைத்தும் சிவன் செயல் என்று அடிமை பூண்டு ஒழுகுவதால் அவை பயனற்றுப் போய் விடுகின்றன. இவ்வாறாக மூன்று விதமான் வினைகளிலிருந்தும் விடுபட்டு சிவகதியடைவர்.

விஞ்ஞான கலர்கள் தங்கத்தினால் ஆன கோட்டையைப் போன்றவர்கள். இயல்பாகவே சுத்தமானது. வெளியிலிருந்து அழுக்கு சேர்வதில்லை. பரிசுத்தமாக ஆக்குவதற்கு முயற்சி அதிகம் தேவையில்லை. இருக்கும் பிறவியிலேயே பதியின் அருளாலே பதியினை அடையும் தகுதி உடையவர்கள்.

பிரளயா கலர் வெள்ளியினாலான கோட்டையைப் போன்றவர்கள். சுற்றுச் சூழலின் சம்பந்தத்தினால் வெள்ளி கருத்துப் போவது போல சிறிதே அழுக்கின் சேர்க்கையுடையவர்கள். பரிசுத்தமாக ஆவதற்கு சிறிது அதிகமாக முயற்சி தேவை. ஒரு சில பிறவிகள் எடுத்து பதியினை அடையும் தகுதி பெற்றவர்கள். சகலர்கள் இரும்பினாலான கோட்டையைப் போன்றவர்கள். வெகு சுலபமாக இரும்பு துரு பிடிப்பது போல், அழுக்கு அதிகம் உடையவர்கள். ஆன்ம ஞானம் பெறுவதற்கு வெகு அதிகம் முயற்சி தேவை. பற்பல பிறவிகள் எடுத்த பின்னரே பதியினை அடையும் தகுதி பெருவர்.

ஒரு சீவன் நல்வினையே செய்தலாலும், தீவினைகளை தவிர்த்தலாலும் கன்ம வினையை எதிர்கொள்ள முடியும்.

சிவ நெறியைப் பின்பற்றுதலாலும், தத்துவ ஞானத்தை குருமுகமாக வளர்த்துக் கொள்வதாலும், சித்தத்தை சிவன் பால் வைத்தலாலும் மாயா மலத்தை எதிர் கொள்ள முடியும்.

சிவனருள் இருந்தாலன்றி ஆணவ மலத்தை எதிர் கொள்ளல் இயலாது.

### 42. இந்தப் புராணச் செய்தியைப் போற்றும் தலம் எது? அது எங்குள்ளது?

இந்த வீரச் செயலுக்குரிய தலம் திருவதிகை வீரட்டானம். இது கெடில நதியின் வடகரையில் அமைந்துள்ளது. கடலூர் மாவட்டம்

பண்ருட்டியிலிருந்து, இரண்டு கிலோமீட்டர் தூரத்தில் வீரட்டானேஸ்வரர் கோவில் அமைந்துள்ளது.

### 43. இந்தத் தலத்தின் சிறப்பை பற்றியும், கோவிலின் அமைப்பைப் பற்றியும் தெரிந்து கொள்வோமா?

மருள் நீக்கியாராகத் திருவாமூரில் அவதரித்து, பல ஆண்டுகள் சமணமதத்தில் பணியாற்றி, சூலை நோயால் பீடிக்கப்பட்டு, தமக்கையாரான திலகவதியார் வழிகாட்டுதலின் படி திருவதிகை வீரட்டானேஸ்வரரைத் தஞ்சமடைந்து, சூலை நோய் நீங்கி இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட திருநாவுக்கரசர் சைவ சமயத் தொண்டினை ஆரம்பித்த பெருமையுடைய தலம் இந்தத் திருவதிகை. இறைவனே, பாமாலையால் தன்னைப் போற்றிய மருள் நீக்கியாருக்கு 'நாவுக்கரசு' என்னும் சிறப்புப் பெயரை வழங்கிய தலம்.

தலங்கள் தோறும் இறைவனைத் தரிசித்துக் கொண்டு இத் தலத்தையடைந்த திருஞானசம்பந்தர் வேண்டுகோளுக்கிணங்க சிவபெருமான் பார்வதிதேவியுடன் சேர்ந்து தன் நடனக்காட்சியைக் காட்டியருளிய தலம்.

திருவெண்ணெய் நல்லூரில் இறைவனால் தடுத்தாட் கொள்ளப்பட்ட சுந்தரமூர்த்தி நாயனார், தனது தல யாத்திரையின்போது புண்ணிய பூமியான திருவதிகையை மிதிக்க அஞ்சி ஊருக்கு வெளியே ஒரு மடத்தில் தங்கியிருந்த போது இறைவனே ஒரு ஏழை அந்தணர் உருவில் எழுந்தருளி சுந்தரருக்கு திருவடி தீக்ஷை கொடுத்த தலம்.

இத் தலத்தினில் இறைவன் த்ரிபுர சம்ஹார மூர்த்தியாக சற்று அதிக வீரத்துடன் ஒரே நேரத்தில் அசுரர்கள், மற்றும் தேவர்களின் அகந்தையை அழித்ததால் திரு அதிகை திருவதிகை யாயிற்று. மேலும் இவ்வாலயத்திற்கு வருபவர்களுடைய கோரிக்கைகளை அதி விரைவாக (அதிகையாக) தீர்ப்பதனால் திருவதிகை ஆயிற்று என்று பெயர்க் காரணம் கூறுவதும் உண்டு.

இறைவன் திருக்கோயில் கிழக்கு நோக்கிய அமைப்புக் கொண்டது. முகப்பிலே ஏழு நிலைகள் கொண்ட ராஜகோபுரம். கோபுரத்தின் உட்பக்கம் நடனக்கலையின் பல்வேறு கரணங்கள் அழகுடன் செதுக்கப்பட்டுள்ளன. முதல் பிராகாரத்தில் கொடிமரமும், நந்தியும், சக்கர தீர்த்தமும் உள்ளன.

இரண்டாவது பிராகாரத்தின் வாயிலில் ஐந்து நிலைகள் கொண்டகோபுரம் அலங்கரிக்கிறது. அதைத்தாண்டி உள்ளே சென்றால் இறைவன் கர்ப்பக்ருஹமும் அம்பாள் சன்னிதியும் உள்ளன. இங்கு வீரட்டானேஸ்வரர் 16 பட்டையுடன் பெரிய லிங்க ரூபத்தில் மஹா லிங்கமாக காட்சியளிக்கிறார். அம்பாள் த்ரிபுரசுந்தரியாக வலப் பக்கத்தில் காட்சிகொடுக்கிறார். லிங்கத்திற்கு பின்னால் உருவமுடன் சிவன் பார்வதியை சுதை வடிவில் காணலாம். கருவறைக்கு பக்கத்திலேயே நாவுக்கரசருக்கும், திலகவதியாருக்கும் உற்சவ விக்கிரங்கள் உள்ளன. திரிபுராந்தகமூர்த்தியின் சிற்பம், பன்னிரு கரங்களுடன், பெரிய தேரின் மீது ஒரு

காலை ஊன்றி இடக்கரத்தில் வில்லும், வலக்கரத்தில் அம்பும் ஏந்தி நாண் ஏற்றும் பாவனையில் அமைக்கப்பட்டுள்ளது.

சிற்பக்கலை மிளிர சிவனாரின் பற்பல திருவிளையாடல்களையும் சித்தரிக்கும் அற்புதச் சிலைகள் கொண்டு விளங்கும் இந்தக் கோயில் அவசியம் தரிசிக்கப்பட வேண்டிய ஒன்று.

**44. மேலே செல்வதற்கு முன்னால் இத்தலத்தில் பாடப்பெற்ற தேவாரப் பாடல்கள் சிலவற்றைப் பார்க்கலாமே?**

திருநாவுக்கரசரை இறைவன் ஆட்கொண்ட தலம் என்பதால் அப்பர் பெருமான் இங்கு பல பதிகங்கள் பாடியுள்ளார். அவற்றுள் ஒரு பாடலை உதாரணமாகப் பார்க்கலாம்.

**"கொம்பினார் குழைத்த வேனற் கோமகன் கோல நீர்மை**
**நம்பினார் காண லாகா வகையதோர் நடலை செய்தார்**
**வெம்பினார் மதில்கள் மூன்றும் வில்லிடை யெரித்து வீழ்த்த**
**அம்பினார் கெடில வேலி யதிகை வீரட்டனாரே".**

**(திருமுறை 4-27-3)**

பாடலின் கருத்து:-

மன்மதன் தன்மலர் அம்புகளால் சிவபெருமானின் தவத்தைக் கலைத்து பார்வதியைத் திருமணம் செய்து கொள்ளுமாறு வேண்டி நின்றார். அவ்வெண்ணம் ஈடேறாத வகையில் பெருமான் தம் நெற்றிக் கண்ணைத் திறந்து எரித்தார். தீயவர்களாய முப்புர அசுரர்களையும் கோட்டையையும் எரித்து வீழ்த்திய அம்பினர் ஆகிய பெருமானே, கெடில நதிக்கரையில் அமர்ந்துள்ள திருவதிகை வீரட்டனாவார்.

திருஞானசம்பந்தரும் இத் தலத்தில் ஒரு பதிகம் பாடியுள்ளார். ஆனால் அதில் திரிபுராந்தகச் செயல் குறிப்பிடப்படவில்லை. திருநள்ளாறு பதிகத்தில் ஞானசம்பந்தர் திரிபுரதகனச் செயலைப் போற்றுகிறார். அந்தப் பாடலைப் பார்ப்போம்.

**"சிட்டமார்ந்த மும்மதிலுஞ் சிலை வரைத்தீயம்பினால்**
**சுட்டு மாட்டிச் சுண்ணவெண்ணி றாடுவதன் றியும் போய்ப்**
**பட்டமார்ந்த சென்னிமேலோர் பால்மதியஞ் சூடி**
**நட்டமாடு நம்பெருமான் மேயது நள்ளாறே". (திருமுறை 1-49-8)**

இதன் பொருள்:-

வலிமை பொருந்திய சிறப்பான மும்மதில்களை, மேரு மலையை வில்லாகக் கொண்டு, தீயை அம்பாகவும் சுட்டுப் பொசுக்கிச் சாம்பலாக்கி, திருநீற்றினைப் பூசுவதோடு நெற்றிப் பட்டம் உடைய தலையின் மேல் வெண்பிறையைச் சூடி ஆடல் ஆடுகின்ற நம்பிரான் உறைவது திருநள்ளாறேயாகும்.

சுந்தர மூர்த்தி ஸ்வாமிகளும் இத்தலத்து வீரட்டானேசுவரரைப் போற்றி ஒரு பதிகம் அருளியுள்ளார். அதிலிருந்து ஒரு பாடல்:-

**“திருந்தாத வாளவுணர் புரமூன்றும் வேவச்**
**சிலைவளைவித் தொருகணையால் தொழில்பூண்ட சிவனைக்**
**கருந்தாள மதகளிற்றி னுரியானைப் பெரிய**
**கண்மூன்றும் உடையானைக் கருதாத அரக்கன்**
**பெருந்தோள்கள் நாலைந்தும் ஈரைந்து முடியும்**
**உடையானைப் பேயுருவம் மூன்றுமுற மலைமேல்**
**இருந்தானை யெறி கெடில வட வீரட்டானத்**
**துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே”.**

**(திருமுறை 7-38-9)**

இதன் பொருள்:-

மேரு மலையை வில்லாகக் கொண்டு வளைத்து ஓரம்பினால் திருந்தாத அசுரர்களின் முப்புரங்களை அழித்தவர் சிவன். கரிய அடிகளைக் கொண்ட மதயானையின் தோலைப் போர்த்தியவர். பெரிய மூன்று கண்களை உடையவர். பெரிய தோள்கள் இருபதையும், பத்து தலைகளையும் உடைய பேயினது உருவம் போன்ற இராவணனைக் கயிலை மலைமேல் ஊன்றி நீங்காது இருப்பவர். அவரே கெடில ஆற்றின் வடகரையிலுள்ள வீரட்டானத்தில் உறைபவர். அவரை இனி ஒரு பொழுதும் இகழ மாட்டேன்.

### 45. திருமந்திரத்தில் ஆறாவதாக விவரிக்கப்படும் வீரச் செயல் எது?

அடுத்ததாக திருமந்திரத்தில் நாம் கண்பது கஜ சம்ஹாரம். சிவனார் தாருகாவனம் என்ற அடர்ந்த காட்டில் வசித்து வந்த முனிவர்களால் ஏவப்பட்ட ஒரு மதங்கொண்ட யானையைக் கொன்று அதன் தோலை உரித்துப் போர்த்துக் கொண்ட புராணக் கதையை சுருக்கமாக்க் கூறுவார் திருமூலர்.

### 46. அந்தப் புராணக்கதையை நாமும் தெரிந்து கொள்ளலாமே?

இந்தக் கதை வெவ்வேறு புராணங்களில் வெவ்வேறு விதமாகக் கூறப்பட்டுள்ளது. திருமந்திரத்தில் கூறப்பட்டுள்ள கதை கந்த புராணத்தில் வருவதை ஒட்டியுள்ளது. அதன்படி, தாருகாவனம் என்ற காட்டில் வாழ்ந்த முனிவர்கள் வேதம் சொல்லும் வேள்விகளிலேயும், கருமங்களிலேயும் முழு நம்பிக்கை கொண்டவர்களாயிருந்தனர். தாங்கள் செய்யும் வேள்விகளே தேவர்களை எல்லாம் வாழவைக்கின்றன என்று இறுமாப்புக் கொண்டிருந்தனர். அவர்களுக்கு ஒரு பாடம் புகட்ட, சிவன் திருவுளம் கொண்டார். வனப்பு மிகுந்து இளமையான வாலிபனாய் அந்தக் காட்டினுள் நுழைந்து முனிவர்களின் ஆசிரமங்களின் வாயிலில் பிக்ஷையேந்தி நின்றார். முனிபத்தினிகள் அவருடைய அழகில் மயங்கி அவரைப் பின் தொடர்ந்தனர். அதனால் கோபம் கொண்ட முனிவர்கள் ஒரு கோரமான யாகத்தைச் செய்து அதனின்றும் ஒரு பயங்கரமான் மதயானையைத் தோற்றுவித்து

பிட்சாடனரான சிவனை அழிக்கும்படி ஏவிவிட்டனர். வேற்றுருவத்தில் இருந்த சிவன் அந்த யானைக்குள் புகுந்து அதன் வயிற்றைப் பிளந்து, அதன் தோலைப் போர்த்துத் தாண்டவம் ஆடியதாகப் புராணம் கூறும்.

**47. இந்தச் செய்தியைக் கூறும் திருமந்திரப் பாடல் எது?**

**"முத்தீக் கொளுவி முழங்கெரி வேள்வியுள்**
**அத்தியுரி அரனாவ தறிகிலர்**
**சத்தி கருதிய தாம்பல தேவரும்**
**அத்தீயுனுள் ளெழுந்தன்று கொலையே. (திரு. 344)**

முத்தீ என்றது காருகபத்தியம், ஆஹவனீயம், தக்ஷிணாக்னி என்ற மூன்று அக்னிகள். வெவ்வேறு வேதத்தில் விதிக்கப்பட்ட கார்யங்களுக்கு இந்த அக்னிகள் பயன்படுத்தப்படும். உரக்க வேத மந்திரங்களைச் சொல்லி தேவர்களுக்கு வேள்வியில் ஆஹூதிகள் வழங்கப்படும். அந்த வேள்வியிலிருந்து தோன்றிய யானை உருவம் கொண்ட அரக்கனைக் கொன்று அவன் தோலை உரித்தான் அத்தியுரி அரனான சிவபெருமான்.

**48. இந்தப் பாடலின் மூலம் திருமந்திரம் நமக்கு உணர்த்தும் செய்தி என்ன?**

இந்தப் பாடலின் முக்கியமான அறிவுரை வேதத்தின் கர்ம கண்டத்தில் கூறப்பட்டுள்ள சடங்குகளை மட்டுமே நம்பி அதை எவ்வளவு முறையாகச் செய்தாலும், அது ஒருவனை இறைவனிடம் கொண்டு சேர்க்காது என்பது தான். வேள்வியின் பலனை விழுங்கும் தேவர்களும் கடைசியில் அத்தீயினுள் விழுந்து அழிய வேண்டியதுதான் என்கிறது இந்தத் திருமந்திரம்.

முண்டக உபநிடத்தின் கீழ்க்கண்ட மந்திரங்கள் இங்கு நினைவு கூறத் தக்கது.

**"ப்லவா ஹ்யேதே அத்ருடா யஜ்ஞரூபா:**
**அஷ்டாத சோக்த-மவரம் யேஷுகர்ம: |**
**ஏதச் ச்ரேயோ யேபிநந்தந்தி மூடா:**
**ஜரா ம்ருத்யும் தே புனரேவாபியந்தி || (மு.உ.ப.1.2.7)**

கருத்து:- வேதங்களில் கூறப்பட்ட பதினெட்டு விதமான சடங்குகள் விரிவுபட்டதும், ஆழமானதுமாக இருந்தாலும் அவை தாழ்ந்தவை. வேள்வி வடிவமான

இப்படகுகள் திடமற்றவை. எவர்கள் இதையே பெரும் பேறாக எண்ணிக் களிக்கிறார்களோ, அவர்கள் பிறப்பிறப்பை மீண்டும் மீண்டும் அடைகிறார்கள்.

இந்தக் கருத்தை வலியுறுத்தும் மற்றும் ஒரு மந்திரம் இதோ:-

**"நாயமாத்மா ப்ரவசனேன லப்ய:**
**ந மேதயா ந பஹுனா ஸ்ருதேன |**
**யமேவைஷ வ்ருணுதே தேன லப்ய:**
**தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தனூம் ஸ்வாம் || (மு.உ.ப. 3.2.3)**

கருத்து:-

வேதங்களைக் கற்றதாலோ, நுண்ணறிவினாலோ, கேள்வியறிவினாலோ, இந்த ஆத்மா அடையப்படுவதன்று. ஒரு மனதாக எவன் ஆத்மாவை எப்போதும் சிந்தித்திருக்கிறானோ, அவனால் ஆத்மஞானம் அடையப்படும். அவனுக்கு பரமாத்மா தன்னுடைய உண்மை ஸ்வரூபத்தை வெளிப்படுத்தும்.

மற்றும் ஒரு உண்மையையும் இந்தப் பாடல் நமக்கு உணர்த்துகிறது. யானையை ஐம்புலங்களுக்கு உவமையாகக் கூறுவார்கள். மத யானையை அடக்குவது மிகக் கடினம். அது போல புலன்களை கட்டுக்குள் வைத்திருப்பது அசாத்தியமான காரியம்.

**“அஞ்சு உள ஆனை அடவியுள் வாழ்வன**
**அஞ்சுக்கும் அஞ்செழுத்து அங்குசம் ஆவன**
**அஞ்சையும் கூடத்து அடக்க வல்லார்கட்கே**
**அஞ்சு ஆதி ஆதி அகம் புகலாமே”. ( திரு. 977)**

உடல் என்கிற காட்டுக்குள் ஐம்புலன்களாகிய யானை ஒன்று உண்டு. அதை அடக்க ஐந்தெழுத்து தான் அங்குசம். அந்த இறைச் சிந்தனையை வைத்துக் கொண்டு அந்த யானைய அடக்கி வைப்பவர்களுக்கு இறைவன் புலப்படுவான் என்பது பாடலின் கருத்து. இந்தப் புராணக் கதையும் அதையே குறிப்பால் உணர்த்துகிறது.

**49. இந்தப் புராணச் செய்தியைப் போற்றும் தலம் எது? அது எங்குள்ளது?**

கஜ ஸம்ஹாரத்திற்குரிய தலம் வழுவூர் மயிலாடுதுறை மாவட்டத்தில் உள்ளது. பிரளயத்தின் போது, உலகமெல்லாம் அழிவை எதிர்கொண்ட போது இவ்வூர் அழியாமல் வழுவின காரணத்தினால் வழுவூர் என்ற பெயர் பெற்றதாக தலபுராணம் கூறும். தல புராணத்தில் பிப்பலாரண்யம் என்ற பெயரும் காணப்படுகிறது. இறைவன் வீரட்டானேஸ்வரர். யானயின் தோலைப் போர்த்தியதால் குத்திவாசேச்வரர் அல்லது கீர்த்திவாசேச்வரர் என்ற பெயரும் உண்டு. அம்பாளின் பெயர் இளங்கிளை நாயகி. வடமொழியில் பால அங்குராம்பிகை.

**50. இந்தக் கோயிலின் அமைப்பைப் பற்றிக்கொஞ்சம் கூறுங்கள்.**

கிழக்கு நோக்கிய பெரிய கோயில். முகப்பில் ஐந்து நிலைகள் கொண்ட ராஜகோபுரம். நான்கு பிராகாரங்கள். தல விருட்சம் வன்னிமரம். வீரட்டானேசுவரர் ஸ்வயம்பு மூர்த்தியாக இலிங்கத்திருமேனியுடன் அருள்பாலிக்கிறார். இது தேவார வைப்புத்தலம். கஜ ஸம்ஹாரமூர்த்தி உற்சவ விக்கிரஹமாக ஊர்த்வ தாண்டவம் ஆடிய நிலையில், உள்ளங்கால் தெரியும்படி அமைந்துள்ளது இத்தலத்தின் சிறப்பு. மாசி மகத்தன்று உற்சவ காலத்தில் காலை கஜ சம்ஹார நடனம் நடைபெறும். பஞ்ச ப்ரும்ம தீர்த்தம், ஸரஸ்வதி தீர்த்தம் இந்தக் கோயிலின் புண்ணிய தீர்த்தங்களாகும். கஜ ஸம்ஹாரமூர்த்திக்கு பின்புறம் ஒரு இயந்திரப் ப்ரதிஷ்டை உள்ளது.

**51. இந்தத் தலத்து இறைவனைப் போற்றும் தேவாரப் பாடல்கள் உள்ளனவா?**

இந்தத் தலத்துக்குரிய தேவாரப் பாடல்கள் கிடைக்கவில்லை. ஆயினும் அப்பர் சுவாமிகள் இரண்டு பாடல்களில் வழுவூர் வீரட்டானத்தைக் குறிப்பிடுவதால் இது வைப்புத் தலமாகக் கொள்ளப்படுகிறது. அந்தப் பாடல்களைக் கீழே காணலாம்.

**"உஞ்சேனை மாகாளம் ஊறல் ஒத்தூர்**
**உருத்திர கோடி மறைகாட்டுள்ளும்**
**மஞ்சார் பொதியின் மலை தஞ்சை வழுவூர்**
**வீரட்டம் மாதானம் கேதாரத்தும்**
**வெஞ்சமாக்கடல் மீயச்சூர் வைகா**
**வேதீச்சுரம்விவீசுரம் வெற்றியூரும்**
**கஞ்சனூர் கஞ்சாறு பன்சாக்கையும்**
**கயிலாத நாதனையே காணலாமெ ".** **(திருமுறை 6.70.8)**

கருத்து:-

உஞ்சேனை மாகாளம், திருஊறல் (தக்கோலம்), திருவொத்தூர், உருத்திரக்கோடி, திருமறைக்காடு, பொதியின் மலை, தஞ்சை, வழுவூர் வீரட்டம், மாதானம், திருக்கேதாரம், திருவெஞ்சமாக்கூடல், மீயச்சூர், திருவைகாவூர், வேதீச்சுரம், விவீச்சுரம், வெற்றியூர், கஞ்சனூர், கஞ்சாறு, பஞ்சாக்கை ஆகிய தலங்களில் கயிலாய நாதனைக் காணலாம்.

**"காவிரியின் கரைக்கண்டி வீரட்டானம்,**
**கடவூர் வீரட்டானம், காமருசீர் அதிகை**
**மேவிய வீரட்டானம், வழுவை வீரட்டம்,**
**வியன் பறியல் வீரட்டம், விடையூர் திக் கிடமாம்**
**கோவல் நகர் வீரட்டம், குறுக்கை வீரட்டம்,**
**கோத்திட்டைக்குடி வீரட்டான மிவை கூறி**
**நாவில் நவின்று உரைப்பார்க்கு நணுக்கச் சென்றால்**
**நமன் தமரும் சிவன் தமர் என்று அகல்வர் நன்கே."**

கருத்து:-

காவிரிக் கரையில் மேவும் திருக்கண்டியூர் வீரட்டானம், திருக்கடவூர் வீரட்டானம், திருவதிகை வீரட்டானம், வழுவூர் வீரட்டம், திருப்பறியலூர் வீரட்டம், திருக்கோவிலூர் வீரட்டானம், திருக்குறுக்கை வீரட்டம், கோத்திட்டைக்குடி என்கிற திருவிற்குடி வீரட்டம் என அட்ட வீரட்டத் தலங்களைக் கூறி நாவினால் உரைக்கும் அன்பர்களைச் சிவபெருமானுடைய தமர்கள் என்று எண்ணி நமன் தமர்கள் விலகிச் செல்வார்கள்.

தேவாரப் பாடல்களில் பல இடங்களில் கஜ ஸம்ஹார சிவனைப் போற்றும் இடங்களுண்டு. அவற்றி சில:-

**"வாயே வாழ்த்து கண்டாய் எ மத**
**யானை யுரி போர்த்துப்**
**பேய் வாழ் காட்டகத்தாடும் பிரான்றன்னை**
**வரியே வாழ்த்து கண்டாய்'. (திருமுறை 4.9.5)**

கருத்து:-

வாயே! ஈசனை வாழ்த்திப் பேசுவாயாக. அப்பெருமான் யானையின் தோலை உரித்துப் போர்த்திக் கொண்டவர்.; பேய்கள் விரித்தாடும் மயானத்தில் நடம் புரிபவர். அப்பிரானை, வாயே! வாழ்த்துவாயாக.

**"போர்த்தாயங்கோ ரானையின் ஈருரிதோல்**
**புறங்காடரங்காநட மாடவல்லாய்**
**ஆர்த்தாரைக் கன்றனை மால்வரைக்கீழ்**
**அடர்த்திட் டருள் செய்த வது கருதாய்**
**வேர்த்தும்புரண்டும் விழுந்தும் எழுந்தால்**
**எனவேதனை யான விலக்கிடாய்**
**ஆர்த்தார்புனல் சூழதி கைக்கெடில**
**வீரட்டானத்துறை அம்மானே". (திருமுறை 4.1.10)**

கருத்து:-

கெடில நதிக்கரையில் உள்ள வீரட்டானத்தில் மேவும் ஈசனே! யானையின் தோலை உரித்துப் போர்த்து விளங்கும் நாதனே! சுடுகாட்டினை அரங்கமாகக் கொண்டு நடனம் புரியும் பெருமானே! இராவணனைக் கயிலை மலையின் கீழ் நெரித்து பின்னர் அருள் செய்ததைக் கருதமாட்டீரா? பிணியால் வாடுகின்ற என் பிணியைத் தீர்ப்பீர்.

**52. திருமந்திரத்தில் அடுத்ததாக வரும் வீரட்டானம் எது? அங்கு நடந்த வீரச்செயல் என்ன?**

திருமூலர் ஏழாவதாகக் கையாளும் வீரச்செயல் திருக்கடவூரில் காலனை உதைத்தது. பதினாறே வயதான மார்க்கண்டேயன் என்னும் சிறுவன் தனக்கு விதிக்கப்பட்ட ஆயுள் முடியும் தருணத்தில், சிவன் ஆராதனையில் மூழ்கி, சிவனையே சரணடைந்த போது, அவன் உயிரை எடுக்க வந்த காலனை இறைவன் காலால் உதைத்து வீழ்த்திய புராணக் கதை நாம் அறிந்ததே. சிவ பக்தியின் மேன்மையை நமக்கு உணர்த்தும் இந்தக் கதை கந்த புராணத்திலும், சிவமஹாபுராணத்திலும் விரிவாகத் தரப்பட்டுள்ளது.



படம் 1. அந்தகாசுர சம்ஹார மூர்த்தி திருக்கோவிலூர்




படம் 2. தக்கன் யாகத்தை அழித்த வீரபத்திரர் -மதுரை



படம் 3. பிரம்மன் சிரத்தைக் கொய்தல் - காஞ்சிபுரம்



படம் 4. சலந்தர சம்ஹார மூர்த்தி - மதுரை



படம் 5. திரிபுராந்தகர் - மதுரை




படம் 6. கஜ சம்ஹார மூர்த்தி - மதுரை

**53. அந்தப் புராணக்கதையைச் சற்று விரிவாகச் சொல்லுங்களேன்.**

ம்ருகண்டு என்னும் முனிவர், பல நாட்களாகப் புத்திரப் பேறு இல்லாமையால், மனைவியுடன் கூட சிவபெருமானை நோக்கித் தவமிருந்தார். அவர்களுக்கு சிவனார் தரிசனம் தந்து "உங்களுக்கு ஞான சூன்யனாய் ஆனால் நூறாண்டு வாழும் மகன் வேண்டுமா? அல்லது அறிவு மிக்கவனாய் ஆனால் பதினாறே ஆண்டுகள் வாழும் மகன் வேண்டுமா? என வினவ, முனிவர் அறிவுடைய மகனையே விரும்பிக் கேட்டார். அவ்வாறே வரமருளி சிவனார் மறைந்ததும், அத் தம்பதியினருக்கு மார்க்கண்டேயன் என்ற மகன் பிறந்து, கல்வியிலும், சிவ பக்தியிலும் சிறந்து விளங்கினான். மார்க்கண்டேயன் 16 வயது அடைந்ததும், தாய், தந்தையிடமிருந்து தனது வாழ்நாள் முடியப் போகிறது என்று அறிந்து சிவலிங்கத்தைப் பூசை செய்வதிலேயே காலத்தைக் கழித்தார். பதினாறு வயது முடியும் நாளில் எமதர்மன் வந்து அழைக்க, அவனோ சிவலிங்கத்தை இறுகத் தழுவி தஞ்சமடைந்தான்.

எமன் தனது பாசக் கயிற்றால் மார்க்கண்டேயனையும், சிவலிங்கத்தையும் சேர்த்தே பிணைத்து இழுத்தபோது சிவபெருமான் வெளிப்பட்டு, தமது இடது காலால் கூற்றுவனை உதைத்துத் தள்ளினார். மார்க்கண்டேயனுக்கு என்றும் பதினாறாக இருக்கும் சிரஞ்சீவி என்னும் பதவியை அளித்து அருளினார்.

**54. இந்தப் புராணச் செய்தியைக் கூறும் திருமந்திரப்பாடலைப் பார்க்கலாமே?**

**"மூலத்துவாரத்து மூளும் ஒருவனை,**
**மேலைத்துவார்த்து மேலுற நோக்கமுற**
**காலூற்றுக் காலனைக் காய்ந்தங்கி யோகமாய்**
**ஞாலக் கடவூர் நலமாய் இருந்ததே. (திரு. 341)**

சிவலிங்கத்தினின்றும் மேலெழுந்துக் கிளம்பி வெளிவந்தான் அல்லவா இறைவன்? அப்படி வந்த பொழுது மரணத்தை வென்றான் மார்க்கண்டேயன். இதை ஒரு யோகப் பயிற்சியுடன் இணைத்து விளக்கம் கொடுக்கிறார் திருமூலர். மூலத் துவாரம் என்றது மூலாதாரத்தைக் குறிக்கும். மேலைத் துவாரம் என்பது சஹஸ்ராரத்தைக் குறிக்கும். ஒரு யோகி தனது மூச்சுப் பயிற்சியின் மூலம் பிராண சக்தியை மூலாதாரத்திலிருந்து கிளப்பி சுழுமுனை நாடியின் மூலம் மேல் நோக்கிப் பாய்ச்சி தலை உச்சியிலுள்ள ஸஹஸ்ராரத்தில் சேர்க்க வேண்டும். அப்படிச் செய்தால் இறைவன் அருள் கிட்டி மரணத்தை வெல்லலாம் என்பதை சிவபெருமான் திருக்கடவூர்த் தலத்தில் காலனைக் காய்ந்ததன் மூலம் உலகுக்கு உணர்த்தினார் என்பது பாடலின் கருத்து.

**55. இந்தத் திருமந்திரப் பாடலிலிருந்து நமக்குக் கிடைக்கும் அறிவுரை என்ன?**

முதலாவதாக நாம் தெரிந்துகொள்ளவேண்டியது விதியை மதியால் வெல்லலாம் என்பதாகும். மார்க்கண்டேயனுடைய தாய் தந்தையர் விதியின்

வலிமையை அறிந்திருந்தாலும், மதியுடைய மகனையே விரும்பினர். நீண்ட ஆயுளையுடைய அறிவிலியை அல்ல. அதன் பயனாய் மகன் சிவனருளைப் பெற்று விதியையும் வென்று சிரஞ்சீவியெனப் புகழ் பெற்றான்.

இரண்டாவதாக சிவயோகத்தை முறையாகப் பயின்று, முழுமையாகக் கடைபிடிப்போர்க்கு நீண்ட ஆயுள் கிட்டும் என்பதாகும். பதஞ்சலியின் யோக மார்க்கத்தை ஒட்டித் தமிழில் அட்டாங்க யோகத்தைத் தெளிவுற விளக்கியவர் திருமூலரே. சிவ பக்தியுடன், யோகத்தையும் இணைத்து சிவன் பதியை அடைய ஒரு சிவயோகநெறியைத் திருமந்திரம் நமக்குக் காட்டிக் கொடுக்கிறது.

**“கடை வாசலைக் கட்டிக் காலால் எழுப்பி**
**இடை வாசல் நோக்கி இனிது உள் இருத்தி**
**மடை வாயில் கொக்குப் போல் வந்திருப் பார்க்கு**
**உடையாமல் ஊழி இருக்கலும் ஆமே”. (திரு. 591)**

கடைவாசல் என்பது மூலாதாரம். கால் என்பது பிராணாயாமத்தால் அடைக்கப்பட்ட பிராண சக்தி. இடைவாசல் என்பது சுழுமுனை. பிராணாயாமப் பயிற்சியால் அடைக்கப் பெற்ற மூச்சுக்காற்றை, மூலாதாரத்திலிருந்து கிளப்பி, சுழுமுனை வழியாக மேல் நோக்கித் தலை உச்சிக்கு செலுத்தி, மடை வாயிலில் கொக்கு காத்திருக்குமாப் போல, தியானம் செய்வானாயின், உடல் சிதையாமல் வாழ்நாள் நீளும் என்பது கருத்து.

கால சம்ஹார மூர்த்தியைப் போற்றும் பாடலும், மேற் சொன்ன பாடலும் ஒத்த கருத்தையே வலியுறுத்துகின்றன.

அட்டாங்க யோகத்தின் விரிவான விளக்கத்தை ஆசிரியரின் “திருமந்திரத்தில் அட்டாங்க யோகம்” என்னும் சிறு நூலில் காணலாம்.

### 56. இந்தப் புராணச் செய்தியைப் போற்றும் தலம் எது? அது எங்குள்ளது?

இந்த வீரச் செயலுக்குரிய தலம் திருக்கடவூர். தற்காலத்தில் திருக்கடையூர் என்று அழைக்கப் படுகிறது. நாகப்பட்டினம் மாவட்டம் மயிலாடுதுறைக் கருகில் உள்ளது இத்தலம். இறைவன் அமிர்தகடேஸ்வரர். இறைவி அபிராமி அம்பாள்.

### 57. இங்கு அமைந்திருக்கும் ஆலயம் பற்றியும், தலத்தின் சிறப்புகளைப் பற்றியும் சிறிது விளக்க முடியுமா?

இந்தத் தலத்தின் வேறு ஒரு தனிச் சிறப்பு அபிராமி அந்தாதி அருளிய அபிராம பட்டர் பூஜித்த தலம் என்பதாகும். தேவியிடம் நீங்காத பக்தி கொண்ட அபிராம பட்டர் தேவியின் அருளை வேண்டித் த்யானத்தில் இருந்த சமயம் , சரபோஜி மன்னன் கடவூர் இறைவனைத் தரிசிக்க வேண்டி கொவிலுக்கு விஜயம் செய்தான். அங்கு தியானத்தில் மூழ்கி வெளியுலக

நினைவே இன்றி வீற்றிருந்த பட்டரிடம் "இன்று என்ன திதி?" என்று கேட்டான். தேவியின் திருமுகமே தன் மனத்தை நிறைத்திருந்த நிலையில், அபிராம பட்டர் " இன்று பௌர்ணமி திதிதான்" என்றார். அன்று அமாவாசை தினம் என்று அனைவரும் அறிவர் என்பதால் துணுக்குற்றனர்.

அரசன் "அப்படியானால் இன்று இரவு பூரண சந்திரனை ஆகாயத்தில் எமக்குக் காட்டவும். இல்லையேல் உமக்கு அரச தண்டனை கிடைப்பது உறுதி" என்று கூறிச் சென்றான். பட்டரோ தேவியின் மேல் பாரத்தைப் போட்டு, 'உதிக்கின்ற' என்று தொடங்கும் அந்தாதிப் பாடல்களைப் பாடித் துதிக்க ஆரம்பித்தார். விழிக்கே அருளுண்டு என்ற எழுபத்தொன்பதாவது பாடலைக் கேட்ட தேவி தன் தாடங்கத்தைக் கழட்டி வானில் வீசவும், அது பேரொளியுடன் சந்திரனைப் போல் பிரகாசித்தது. இந்த விழா தை அமாவாசையன்று இந்தக் கோவிலில் கோலாகலமாகக் கொண்டாடப்படுகிறது.

இந்த தலத்திற்கு மேலும் ஒரு தனிச் சிறப்பு உண்டு. அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவரான் குங்கிலியக் கலய நாயனார் அவதரித்த ஊர் இது. வீரட்டானேசுவரிடம் தளராக பக்தி கொண்ட கலயர் என்பவர் தினமும் குங்கிலியம் வாங்கி இறைவனுக்கு தூபம் போடும் பணியைத் தவறாது செய்து வந்தார். காலப்போக்கில் செல்வம் அனைத்தையும் இறைவன் பணியிலேயே செலவழித்த கலயரை வறுமை பீடித்தது. சாப்பிடவே வசதியில்லாமல் வாடிய நிலையில், அவர் மனைவி தனது தாலியைக் கொடுத்து அதை விற்று அரிசி வாங்கி வரும்படி கலயரிடம் வேண்டினாள். அதைக் கொண்டு வீதியில் சென்ற கலயர் ஒரு குங்கிலிய வணிகனை எதிர் கொண்டார். தன் வீட்டு நிலைமையை முழுதும் மறந்தவராய், தாலியை விற்று குங்கிலியம் வாங்கி திருப்பணியில் ஈடுபட்டிருக்கும்போது, இறைவன் அசரீரியாய் குங்கிலியக் கலயரை வீடு சென்று அமுதுண்ணும்படிப் பணித்தார். வீடு திரும்பிய நாயனார், இறைவனருளால் வறுமை நீங்கி செல்வச் செழிப்புடன் பல ஆண்டுகள் சிவத் தொண்டு செய்து இறைவனடி சேர்ந்தார்.

காரி நாயனார் என்ற மற்றுமொரு சிவனடியாரும் இந்த ஊரில் அவதரித்தவர். தமிழிலே பாண்டித்யம் உடைய காரி தான் இயற்றிய காரிக்கோவை என்ற நூலை மூவேந்தர்களிடமும் எடுத்துச் சென்று தன் தமிழ்த் திறனால் அவர்கள் ஆதரவைப் பெற்று மிகுந்த செல்வத்துடன் கடவூர் திரும்பினார். அந்த செல்வத்தை எல்லாம் சிவன் கோவில்கள் கட்டுவதிலும், அடியார்களைப் பேணுவதிலும், வறியவர்களுக்கு உதவுவதிலும் செலவழித்தார். கயிலை நாதனை என்றும் மறவாமல் சிவநெறியில் வாழ்ந்து சிவ பதம் சேர்ந்தார்.

சோழ மன்னர்களால் கட்டப்பட்ட இத்திருத்தலத்தில் உள்ள திருக்கோயில் மேற்கு பார்த்து அமைந்துள்ளது. கிழக்கிலும், மேற்கிலும் ராஜகோபுரங்கள் உண்டு. கீழைக் கோபுரத்தினருகில் திருக்குளம் உள்ளது. அந்தப் பிரகாரத்திலேயே தென் மேற்கு மூலையில் அம்பாளின் தனி ஆலயம்

உள்ளது. கடவூர் வீரட்டானேசுவரருக்கு அமிர்தகடேசுவரர் என்ற பெயரும் உண்டு. இந்தப் பெருமானின் இலிங்கத்திருமேனியில் ஒரு பாசத்தழும்பும், ஒரு பிளவும் காணலாம். அவை மார்க்கண்டேயனின் வரலாற்றை நினைவு படுத்தும் வகையில் அமைந்துள்ளன.

மகா மண்டபத்தில் கால சம்ஹார மூர்த்தி சிற்ப வேலைப்பாட்டுடன் கூடிய அழகிய சபையில் தெற்கு முகமாக எழுந்தருளியுள்ளார். இடது திருவடியினால் உதையுண்ட எமன் தலைகீழாக விழுந்த நிலையில் உள்ளார். மார்க்கண்டேயர் இறைவனின் மேற்பக்கத்தில் அமர்ந்த நிலையில் உள்ளார்.

இடது பக்கத்தில் வாலாம்பிகை அம்பாள் சேடியருடன் காட்சியளிக்கிறார். இந்த காலசம்ஹார மூர்த்திக்கு எதிர்ப்புறமாக, எருமை வாகனத்துடன் எமன் ஈசன் அருளை வேண்டிய படி உற்சவ விக்ரமாக எழுந்தருளியுள்ளார்.

**58. இந்த தலத்திற்குரிய தேவாரப் பாடல்களில் இதற்குரிய புராணச் செய்திகள் இடம் பெற்றிருக்கின்றனவா?**

இந்தத் தலத்தைத் தேவார மூவர்களும் போற்றிப் பாடியுள்ளார்கள். திருஞானசம்பந்தரின் பதிகத்திலிருந்து ஒரு பாடல் கால சம்ஹார மூர்த்தியைப் போற்றுகிறது.

**“எரிதரு வார்சடை யானும் வெள் ளையெரு தேறியும்**
**புரிதரு மாமலர்க் கொன்றை மா லைபுனைந் தேத்தவே**
**கரி தரு காலனைச் சாடினா னுங்கட வூர்தனுள்**
**விரிதரு தோள்புகழ் வீரட்டானத் தர வல்லனே. ! (திருமுறை 2-8.2)**

கருத்து:-

தீப்போன்ற சிவந்த நீண்ட நெடிய சடை முடியைக் கொண்டவன்; வெண்மை நிற இடபத்தை வாகனமாக உடையவன்; சிறந்த கொன்றை மலரை அணிவித்து போற்றி வழிபட்ட மார்க்கண்டேயனுக்கு அருள்புரியும் நிலையில் கரிய கோபம் கொண்ட காலனைக் காலால் உதைத்தவனுமாகிய பெருமான் திருக்கடவூர் வீரட்டானத்தில் வீற்றிருக்கும் அரன் ஆவார்.

திருநாவுக்கரசரும் திருக்கடவூர் திருவிருத்தப் பாடல் ஒன்றில் காலனைக் காலால் உதைத்த இறைவனைப் போற்றுகின்றார்.

**“பாலனுக்காயன்று பாற்கடலீந்து பணைத்தெழுந்த**
**ஆலினிற் கீழிருந் தாரணம் ஓதி யரு முனிக்காய்ச்**
**சூலமும் பாசமுங் கொண்டு தொடர்ந்தடர்ந் தோடிவந்த**
**காலனைக் காய்ந்த பிரான்கட வூருறை யுத்தமனே”.**
**(திருமுறை 4-107-6)**

கருத்து:-

இறைவன் (வியாக்ரபாத முனிவரின் திருமகனான) உபமன்யு பாலுக்காக அழுதபொழுது, பாற்கடல் ஈந்தவர்; கல்லால மர நிழலின் கீழமர்ந்து சனகாதி முனிவர்களுக்கு வேதப் பொருளை ஓதி அருளியவர்; மார்க்கண்டேயரின் உயிரைக் கவரச் சூலமும், பாசமும் கொண்டு பின் தொடர்ந்து அடர்த்து வந்த காலனை அழித்தவர். இவரே திருக்கடவூர் உத்தமர். மேலும் ஒரு பாடலில் நாவுக்கரசு சுவாமிகள் காலாந்தக மூர்த்தியைப் பாடுகிறார்.

**“நீலத் தன்மேனி செங்கன் வளைவெள் ளெயிற்ற**
**னெரிகேச னேடி வருநாள்**
**காலை நன் மாலை கொண்டு வழிபாடு செய்ய**
**மளவின் கண் வந்து குறுகீப்**
**பாலனையோட வோடப் பயமெய்துவித்த**
**உயிர் வவ்வு பாசம் விடுமக்**
**காலனை வீடு செய்த கழல் போலும் அண்டர்**
**தொழுதோடு சூடு கழலே”. (திருமுறை 4-14-6)**

கருத்து:-

நீல நன்மேனியும், செங்கண்ணும், வளைந்த வெள்ளைக் கோரைப் பல்லும், தீயனைய முடியும் உடையவன் கூற்றுவன். காலையும், மாலையும் வழிபாடு செய்யும் மார்க்கண்டேயனை அணுகி, அஞ்சுமாறு விரட்டிய அக்கூற்றுவனைத் தன் திருவடியால் அழித்தவர் சிவபிரான்; அத்திருவடியே உலகோர் தொழுது வணங்கி போற்றிட உதவும். அத் திருவடிகளை விண்ணோர் தம் திருமுடிமேல் வைத்து சூட்டப் பெறுதலாகும்.

சுந்தரமூர்த்தி சுவாமிகளும் இத்தலத்துப் பதிகத்தில் இறைவன் கூற்றுதைத்த தன்மையைப் போற்றியுள்ளார்.

**“அன்றாலின் நிழற்கீழ் அறம் நால்வர்க் கருள்புரிந்து**
**கொன்றாய் காலனுயிர் கொடுத்தாய்மறை யோர்க்குமான்,**
**கன்றாருங்கரவா கடவூர்த்திரு வீரட்டத்துள்**
**என்தா தைபெருமா னெனக் கோர்துணை நீயலதே”.**
**(திருமுறை 7-28-3)**

கருத்து:-

மான்கன்று பொருந்திய திருக்கரத்தை உடையவரே! திருக்கடவூர் வீரட்டத்தில் எழுந்தருளியுள்ள என் தந்தையே! எம்பெருமானே! அன்று ஆலின் கீழிருந்து நான்கு முனிவர்களுக்கு அருள் புரிந்தாய். காலன் உயிரைக் கொன்றாய். அந்தணச் சிறுவன் மார்க்கண்டேயனுக்கு முடிவில்லாத வாழ்நாளைக் கொடுத்தாய். இத்தன்மையுடைய நீயில்லாமல் எனக்கு வேறு யார் துணை?

**"தஞ்ச மென்றுதன் தாளது அடைந்த**
**பாலன் மேல்வந்த காலனை யுருள**
**நெஞ்சி லோர்உதை கொண்ட பிரானை**
**நினைப்ப வர்மனம் நீங்ககில் லானை**
**விஞ்சை வானவர் தானவர் கூடிக்**
**கடைந்த வேலையுள் மிக்கெழுந் தெரியும்**
**நஞ்ச முண்டனள் ளாறனை அமுதை**
**நாயி னேன்மறந் தென்னினைக் கேனே".** **(திருமுறை 7-68-4)**

கருத்து:-

அடைக்கலம் என்று தன் திருவடியைச் சார்ந்த சிறுவன்(மார்க்கண்டேயன்) மேல் சினந்து வந்த காலனை கீழே வீழ்ந்து உருளும்படி மார்பில் ஓர் உதையுதைத்த பிரான்; நினைப்பார் நெஞ்சினை விட்டு அகலாதவன்; தேவர் அசுரர் ஆகிய இருவரும் சேர்ந்து கடைந்த பாற்கடலில் முதலாவதாக வந்த நஞ்சினை உண்டவன் ஆகிய திருநள்ளாறனை, அமுதம் போன்றவனை நாயினேன் மறந்து வேறெதனை நினைப்பேன்.

### 59. அடுத்ததாக நாம் காணப்போவது திருமந்திரத்தில் எந்த வீரட்டத் தலமும், வீரச்செயலும்?

அடுத்ததாக திருமந்திரம் போற்றும் வீரச்செயல் காமனை எரித்தது. சிவபெருமானின் தவத்தைக் கலைத்த மன்மதனின் செயலால் கோபம் கொண்ட சிவன் நெற்றிக் கண்ணை சிறிதே திறக்கவும் அதன் வெப்பத்தால் உயிரிழந்தான் மன்மதன். பின்னர் ரதியின் வேண்டுகோளுக்கு இணங்க அவனை உயிர்ப்பித்து அவள் கண்களுக்கு மட்டுமே தெரியும்படி அருளினார். இந்தப் புராணக் கதை சிவ புராணத்திலும், கந்த புராணத்திலும் விரித்து சொல்லப் பட்டிருக்கின்றது.

### 60. இந்தப் புராணக் கதையை சற்று விரிவாகக் கூறலாமா?

தக்க யாகத்திற்குப் பிறகு, சதி தேவியின் பிரிவினால் ஏற்பட்ட வைராக்ய மனத்துடன் சிவபெருமான் தனிமையை விரும்பி இமயமலையில் சென்று தவத்திலிருந்தார். சதி தேவியும் தன் உடலைத் தக்க யாகத்தில் தீயிலிட்ட பின், அடுத்த பிறவியிலும் சிவனையே மணாளனாக அடையும் பேற்றை விரும்பி,

இமவானுக்கும், மேனகைக்கும் குழந்தையாகப் பிறந்து பார்வதி என்ற பெயருடன் வளர்ந்து வருவாளானாயினாள். சிறு வயதிலிருந்தே சிவனிடம் மனதைப் பறிகொடுத்த பார்வதி எப்போதும் சிவனாரின் சிந்தையிலேயே திளைத்திருந்தாள். ஒரு சமயம் நாரதர் இமயமலைக்கு விஜயம் செய்த போது, இமவான் மேனகை தம்பதியைப் பார்த்துப் பார்வதி சிவபெருமானையே மணக்கப் பிறந்தவள் என்பதைக் கூறி பார்வதியை சிவனாருக்குப் பணிவிடைச் செய்யத் தூண்டினார். அந்த யோசனையை ஏற்று பார்வதியும்

தன் தோழிகளுடன் சிவன் தனிமையில் தவமிருக்கும் இடம் சென்று அவருக்கு வெகு சிரத்தையுடன் பணிவிடை செய்தாள். சிவபெருமானுடைய தவமோ கலைவதாகத் தோன்றவில்லை.

இதற்கிடையே தாரகன் என்ற அரக்கன் ப்ரும்மாவிடமிருந்து அரிய வரங்களைப் பெற்று யாராலும் வெல்லமுடியாத வல்லமையுடன், தேவர்களையெல்லாம் வெற்றி கொண்டு அவர்களைத் துன்புறுத்தலானான். தேவர்கள் பிரும்மாவிடம் சென்று முறையிடவும், அவர் அதற்குரிய உபாயம் சிவனும், பார்வதியும் இணைவதே என்று உபதேசித்தார். அப்படி இணைவதன் மூலம் உண்டாகும் குழந்தை நம் துயர்களை எல்லாம் துடைப்பான் என்று கூறவும், சிவபெருமானின் தவத்தைக் கலைக்க இந்திராதி தேவர்கள் மன்மதனின் உதவியை நாடினர்.

காமதேவன் முதலில் மறுத்தாலும், தேவர்களின் வற்புறுத்தலினால் சிவபெருமான் மீது தன் மலர் அம்புகளை விடுத்தான். தவம் சற்றே கலைந்த சிவபெருமான் இது மன்மதனின் லீலை என உணர்ந்து தன் நெற்றிக் கண்ணை சற்றே திறக்கவும், அதிலிருந்து கிளம்பிய தீ மன்மதனைச் சுட்டெரித்தது. கணவனை இழந்த ரதிதேவி, சிவனிடம் தன் கணவன் குற்றமற்றவன். தேவர்களின் காரியம் ஈடேற ஒரு கருவியாகப் பயன்படுத்தப் பட்டவன் என்று எடுத்துக் கூறி நியாயம் வேண்டினாள். சிவனாரும் மனமிரங்கி அவனை உயிர்ப்பித்து, அவள் கண்களுக்குத் தெரியும்படி அருளினார். இது சிவ புராணத்தில் நமக்கு கிடைக்கும் வரலாறு.

**61. இதைக் கூறும் திருமந்திராப் பாடலைப் பார்ப்போமா?**

**“இருந்த மனத்தை இசைய இருத்திப்**
**பொருந்திய லிங்க வழியது போக்கித்**
**திருந்திய காமன் செயலழித் தங்கண்**
**அருந்தவ யோகங் கொறுக்கை அமர்ததே (திரு. 346)**

கருத்து:- கொறுக்கை என்றது திருக்குறுக்கை என்பதன் மரூஉ. குறுக்கையிலே அமர்ந்திருக்கும் இறைவன் நமக்கெல்லாம் அருந்தவ யோகம் என்பது என்ன என்பதை உணர்த்துகிறார். இயல்பாகவே அலையும் தன்மையுடைய மனத்தை ஒரு நிலைப்படுத்தி நம் வசமாய் இருத்தி வைத்தல் வேண்டும். மகளிரோடு சேரும் காமச் செயலை விடுத்தல் வேண்டும். காமதேவனின் குறும்பினால் ஏற்படும் சிற்றின்ப வேட்கையை அழித்து சலனமில்லாமல் இருப்பதே தவயோக நிலையாம்.

**62. இந்தப் பாடலின் மூலம் திருமூலர் கூறவரும் அறிவுரை என்ன?**

தவயோகம் மேற்கொண்டு ஆத்மஞானம் பெற விழையும் சாதகனுக்கு காமம் ஒரு பெருந்தடை என்பதை உணர்த்துகிறது இத் திருமந்திரம். காமம் மயக்கத்தை உண்டாக்கும் தன்மையது. காமத்தையும், கள்ளையும் சேர்த்தச் சாடுகிறார் திருமூலர் கீழ்க்காணும் மந்திரத்தில்:

**"காமமும் கள்ளும் கலதிகட்கே ஆகும்**
**மாமலமும் சமயத்துள் மயல் உறும். ! (திரு. 326)**

அறிவை மறைப்பதால் காமமும் கள்ளும் கீழ் மக்களுக்கே உரியது என்கிறது இப்பாடல். இன்னும் ஒரு பாடலில்

**"வாமத்தோர் தாமும் மது உண்டு மாள்வர்**
**காமத்தோர் காமக்கள் உண்டே கலங்குவர். (திரு. 327)**

வாமாசாரத்தைக் கொள்பவர் கள்ளை உண்டு அழிவார்கள். அது போலவே காமத்தின் வசப்பட்ட் மக்களும் மதி கலங்கி அழிவர்.

காம இச்சை நிறைவேறாத போது கோபம் உண்டாகும். காமமும், வெகுளியும் சேர்ந்து அறிவு மயக்கத்தை ஏற்படுத்தும். இவைகளை ஒரு சேர நீக்கியதால் தனக்கு மணியோசை போன்ற, பிரணவத் தொனியுடன் இறைவன் அருள் கிட்டியதாகக் கூறுகிறார் இப்பாடலில்

**"காமம் வெகுளி மயக்கம் இவைகடிந்து**
**ஏமம் பிடித்திருந்தேனுக்கு எறிமணி**
**ஓம் எனும் ஓசையினுள்ளே உறைவதோர்**
**தாமம் அதனைத் தலைப்பட்ட வாறே (திரு. 2436)**

மஹா நாராயண உபநிடதம் காமத்தினின்றும் விடுபட வேண்டி கீழ்க்கண்ட மந்திரத்தை உபதேசிக்கிறது.

**"காமோ கார்ஷீன் நமோ நம:**
**காமோ கார்ஷீத் காம: கரோதி**
**நாஹம் கரோமி**
**காம: கர்த்தா நாஹம் கர்த்தா**
**காம: காரயிதா நாஹம் காரயிதா**
**ஏஷ தே காம காமாய ஸ்வாஹா ||**

இதன் பொருள்:-

எல்லா தேவதைகளுக்கும் மீண்டும் நமஸ்காரம். என்னிடம் நிகழும் பிழை எல்லாம் காமம் செய்தது. காமம் செய்கிறது. நான் செய்யவில்லை. காமமே செயலாளி. நான் செயலாளி அல்லேன். காமமே செய்விக்கிறது. நான் செய்விப்பவன் அல்லன். ஏ காமமே ! உனக்கு இந்த வேள்வியைச் செய்கிறேன். என்னை உன் பிடியிலிருந்து விடுவிப்பாயாக.

காமம் என்ற சொல் உலக வழக்கில் பெண்ணாசையை அல்லது சரீர சம்பந்தமான இன்பத்தைக் குறிக்கும் சொல்லாக வழங்குகிறது. ஆனால் ஆன்மீக இலக்கியத்தில் அது பொதுவாக எல்லா ஆசைகளையும் குறிக்கும் சொல்லே. திருமூலர் ஆசை, அவா என்ற சொற்களைப் பயன்படுத்தி அவைகளை விலக்க வேண்டிய அவசியத்தையும் கூறுகிறார். அவாவறுத்தல் என்ற அதிகாரத்தில் பத்து,பாடல்களில் இவ்வாறு அறிவுறுத்தப்பட்டிருக்கிறது. உதாரணமாக:

**“ஆசை யறுமின்கள், ஆசை யறுமின்கள்**
**ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்**
**ஆசை படப்பட ஆய்வருத் துன்பங்கள்**
**ஆசை விட விட ஆன்ந்த மா மே. !** **(திரு. 2615)**

கருத்து: உலகத்தோரே ‘துன்பங்களினின்றும் நீங்கள் விடுபட வேண்டுமானால் ஆசையை அறவே விட்டொழியுங்கள். ஈசனோடு கூட ஆசையை விடுங்கள். ஆசை என்பது ஒரு பந்தத்தை ஏற்படுத்திப் பிணைப்பது. ஈசனுக்கு பூசை செய்பவர்கூட, ஆசை வளர வளர வெளித்தோற்றத்திலே மயங்கிப் புறவழிபாட்டில் கட்டுண்டு ஆன்ம அறிவை அடையாமல் போகக்கூடும். ஆசை வளர வளர ஒருவர்க்குத் துன்பம் தான் வரும். ஆசையை விட விட ஆனந்தம் வளரும். ஆசை வேறு, அன்பு வேறு. ஆசையில் சுய நலமுண்டு. அன்பு சுயநலம் கலக்காதது. அன்பும், சிவனும் ஒன்று என்றுரைத்த திருமூலர் இங்கு ஆசையை அகற்றும் படிக் கூறுகிறார்.

கீழ்க்கண்ட கீதைச் செய்யுளும் ஒப்பு நோக்கத் தக்கவது.

**“த்யாயதோ விஷயாந் பும்ஸ:**
**ஸங்கஸ் தேஷூ பஜாயதே ।**
**ஸங்காத் ஸஞ்ஜாயதே காம:**
**காமாத் க்ரோதோபி ஜாயதே ॥**

**க்ரோதாத் பவதி ஸம்மோஹ:**
**ஸம்மோஹாத் ஸ்ம்ருதி விப்ரம: ।**
**ஸ்ம்ருதி ப்ரம்சாத் புத்தி நாச:**
**புத்தி நாசாத் ப்ரணஸ்யதி ॥** **(ப. கீ. 2-62 & 63)**

இதன் பொருள்:

நுகரும் பொருளைச் சிந்திக்கின்ற மனிதனுக்கு அவ்விஷயங்களில் பற்று ஏற்படுகிறது. பற்றுதலினின்று ஆசை உண்டாகிறது. ஆசை கோபத்தை விளைவிக்கிறது. கோபத்தினால் மிகுந்த அறிவின்மையும், அறிவின்மையால் புத்தி தடுமாற்றம் உண்டாகும். புத்தி தடுமாற்றம் விவேகத்தைக் கெடுக்கும். விவேகம் இல்லா ஒருவன் அழிவை அடைகிறான்.

**63. இந்த வீரச்செயலைப் போற்றும் திருத்தலம் திருக் குறுக்கை என்பதைத் திருமந்திரத்திலேயே காண்கிறோம். அந்த ஆலய அமைப்பைப் பற்றியும் அதன் சிறப்பைப் பற்றியும் தெரிந்து கொள்ளலாமா?**

இந்த வீரச் செயலுக்குரிய தலம் திருக்குறுக்கை. தற்காலத்தில் கொருக்கை என்று அழைக்கப் படுகிறது. மயிலாடுதுறை மாவட்டம், மயிலாடுதுறையிலிருந்து கொண்டல் வழியாக மணல்மேடு செல்லும் வழியில் உள்ளது இத்தலம்.

மேற்கு நோக்கிய திருக்கோயில். முகப்பிலே ஐந்து நிலை கொண்ட ராஜகோபுரம். இரண்டு பிராகாரங்கள் கொண்டது. இறைவன் வீரட்டானேச்வரர். இறைவி ஞானாம்பிகை. இரண்டாம் கோபுரத்தைத் தாண்டி உள்ளே சென்றால் காம தகன மூர்த்தியின் சந்நிதியை அடையலாம். கர்ப்பக்ருஹ விமானத்தில் சிவன் தவம் செய்தல், காமன் மலர்க்கணை தொடுத்தல், சிவன் நெற்றிக்கண்ணைத் திறந்து மன்மதனை எரித்தல் போன்ற காட்சிகள் சுதை வடிவில் அமைந்துள்ளன. மன்மதனுக்கும், ரதிக்கும் உற்சவ விக்ரஹங்கள் உள்ளன. ஆலயத்திற்கு முன்புறம், சூலதீர்த்தமும், வடபுறத்தில் ஞானதீர்த்தமும் காட்சியளிக்கின்றது. தல விருட்சம் கடுக்காய் மரம்.

குறுக்கை என்று இந்தத் தலத்திற்குப் பெயர் வந்த காரணம் தல புராணத்தில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது. தீர்க்கபாகு என்ற பெயர் கொண்ட முனிவர் இமயமலையில் தவம் செய்து கொண்டிருந்தார். அவர் தலந்தோறும் சிவனை வணங்கிக் கொண்டு இந்தத் தலத்தை வந்தடைந்தார். அவர் தனது வழக்கம் போல் ஆகாயத்தை நோக்கி கைகளை நீட்டி ஆகாய கங்கையின் நீரை அபிஷேகம் செய்வதற்காக முயற்சிக்கும் போது அவருடைய கைகள் குறுகிப் போயின. அதனால் வருத்தமடைந்த முனிவர் தன் உயிரை மாய்த்துக் கொள்ள முயன்றபோது ஈசன் அம்மையோடு காட்சி தந்து ஆட்கொண்டார். கை குறுகியதால் இத்தலத்திற்கு குறுக்கை என்று பெயர் வந்ததாகக் கூறுகின்றனர்.

**64. இந்தத் தலத்திற்கு உரித்தான் தேவாரப் பாடல்கள் உண்டா? இந்த வீரச்செயல் தேவார மூவர்களால் போற்றப் பட்டிருக்கிறதா?**

ஆம். திருஞானசம்பந்தர் திருக்கோணமலை பதிகத்தில் ஒரு பாடலில் இந்த நிகழ்வை போற்றியுள்ளார். அந்தப் பாடல் இதோ:

**“பழித்திளங் கங்கை சடையிடை வைத்துப்**
**பாங்குடை மதனனைப் பொடியா**
**விழித்தவன் தேவி வேண்டமுன் கொடுத்த**
**விமலனார் கமலமார் பாதர்**
**தெழித்துமுன் னாற்றுஞ் செழுங்கடற் றானஞ்**
**செம்பொனு மிப்பியுஞ் சுமந்து**
**கொழித்துவன் றிரைகள் கரையிடைச் சேர்க்குங்**
**கோணமா மலையமர்ந் தார்”** **(திருமுறை 3-123-4)**

கருத்து :-

பெருக்கெடுத்து ஓடிவரும் கங்கையை இறைவன் சடைமுடியில் கொண்டவர்; மன்மதனை எரித்துச் சாம்பலாக்கியவர்; அவன் மனைவியான இரதிதேவி வேண்டிட மீண்டும் உய்யுமாறு பிழைக்கச் செய்த விமலர்; தாமரை போன்ற மலரடிகளை உடையவர்; ஆரவாரித்து வரும் அலைகளின் வாயிலாக முத்தும், மணியும், பொன்னும், சிப்பியும் சேர்க்கும் கரையில் விளங்கிடும் கோணமா மலையில் அப்பெருமான் வீற்றிருப்பார்.

திருநாவுக்கரசர் இத்தலத்தில் இரண்டு பதிகங்கள் அருளியுள்ளார். காம தகனத்தைக் குறிப்பாகச் சொல்லாவிட்டாலும் வேறு பல வீரச் செயல்களைப் போற்றிக் குறுக்கை வீரட்டானாரைப் போற்றுகின்றார்.

உதாரணத்திற்கு ஒரு பாடல்:

**"நீற்றினை நிறையப் பூசி நித்தலும் நியமம் செய்து**
**ஆற்றுநீர் பூரித்தாட்டும் அந்தணனாரைக் கொல்வான்**
**சாற்று நாளற்றதென்று தரும ராசற்காய் வந்த**
**கூற்றினைக் குமைப்பர் போலும் குறுக்கை வீரட்டனாரே".**

**(திருமுறை 4-49-2)**

கருத்து :-

திருநீற்றினை நெற்றியில் மிகுதியாகப் பூசி, தினமும் நியமத்துடன் தூய நீரால் பெருமானை நீராட்டி மகிழும் அந்தணராகிய மார்க்கண்டேயரின் உயிரைக் கவர வந்த காலனின் தூதனை தம் திருவடியால் உதைத்து அழித்த பெருமானே திருக்குறுக்கை வீரட்டத்தில் உறைபவர்.

இன்னமும்

மேலும் ஒரு பாடல்,

**"கழை படு காடு தென்றல் குயில் கூவ**
**வஞ்சு கணையோ னணைந்து புகலும்**
**மழைவடு வண்ண னெண்ணி மகவோனை விட்ட**
**மலரான தொட்ட மதனன்**
**எழில் பொடி வெந்து வீழ இமையோர் கணங்கள்**
**எரியென் றிறைஞ்சி யகலத்**
**தழல்படு நெற்றி யொற்றை நயனஞ் சிவந்த**
**தழல் வண்ண னெந்தை சரணே".** **(திருமுறை 4-14-9)**

கருத்து :-

இனிமையுடைய கரும்பு வில்லைக் கொண்டு, மலர்க்கணை தொடுத்து ஈசன்பால் ஏவுமாறு திருமால், இந்திரன், பிரமன் ஆகியோர் மன்மதனைப் பணித்தனர்; அவனும் அவ்வாறே செய்ய பெருமான் தன் நெற்றிக் கண்ணைத் திறக்க அவனும் எரியுண்டு அழிந்தான்; அத்தகு பேராற்றல் மிக்க சிவபெருமான் எம் தந்தை. நாம் அவரிடம் சரணம் அடைவோமாக.

திருச்சிற்றம்பலம் 

# முடிவுரை

சிவபெருமானின் எட்டு வீரச்செயல்கள், பல புராணங்களிலும் தனித்தனியே விரித்துரைக்கப் பட்டுள்ளன. ஆனால், அவற்றையெல்லாம் ஒன்று சேர்த்து ஒரு வரிசையாக அமைத்து அட்ட வீரட்டமாக முதன் முதலில் அமைத்துக் கொடுத்தது திருமூலர்தான் என்று தோன்றுகிறது.

வடமொழிப் புராணங்கள் பலவும் மிக விரைவாக ஒவ்வொரு வீரச் செயலையும் விளக்கினாலும், அவைகளைக் கோர்வையாக அமைத்து அட்ட வீரட்டமாக அளிக்கவில்லை. அதை நாம் திருமந்திரத்தில் தான் காண்கிறோம். ஒவ்வொரு வீரச் செயலையும் போற்றும் வகையில் ஒவ்வொரு ஆலயம் அமைத்து, அங்கு அந்த இறைவனை வீரட்டானேசுவரராக எழுந்தருளச் செய்து வழிபடுவதும் தமிழ் நாட்டில் மட்டுமேயன்றி வேறு எந்த பகுதியிலும் இல்லை. இந்தியாவிலேயே அதிகமான கோவில்களின் எண்ணிக்கை உடைய மாநிலம் தமிழநாடு. அது மட்டுமன்றி சைவமும், ஆகமங்களும் நடைமுறையிலே செயல் படுத்தபட்டு, மன்னர்களின் ஆதரவுடனும், சைவ மடங்களின் அரவணைப்போடும், மக்களால் பின்பற்றப் பட்டு வந்த பகுதி தமிழ்நாடு என்று அறிய முடிகிறது. இந்த நிலை தற்காலத்திலும் நீடித்துக் கொண்டு இருப்பதைக் காண்கிறோம். அதுவே அந்த எட்டு ஆலயங்களும் தமிழ் நாட்டில் இருப்பதற்குக் காரணமாயிருக்கலாம்.

திருமூலர் தனது திருமந்திரத்தில் இந்த எட்டு வீரட்டானத் தலங்களின் பெயரைக் குறிப்பிடவில்லை. திருக்கடவூரையும், திருக்குறுக்கையையும் மட்டுமே குறிப்பிடுகிறார். ஒருவேளை அவர் வாழ்ந்த காலத்தில் மற்ற ஆலயங்கள், அவ்வளவு பிரபலமாக இருக்கவில்லை என்று கருதத் தோன்றுகிறது, அல்லது அந்த ஆலயங்கள் திருமூலர் காலத்திற்கு பின்னர் மன்னர்களால் விரிவு படுத்தப் பட்டு பெரிய கோவிலாக அமைக்கப் பட்டிருக்கலாம். தேவார மூவர் காலத்தில் இந்த எட்டுத் தலங்களும் பெயர் பெற்ற ஆலயங்களாக வழிபாட்டில் இருந்தன. ஏழு தலங்களுக்கு பதிகங்கள் இருப்பதாலும், எட்டாவது தலமான வழுவூர் வைப்புத் தலமாக பாடப்பட்டிருப்பதாலும் இதை அறிகிறோம்.

ஆனாலும், நவக்கிரகத் தலங்களோ, அல்லது மற்ற பரிகாரத் தலங்களோ, சக்தி பீடங்களோ மக்களிடையே பிரசித்தியாக இருக்கும் அளவுக்கு அட்ட வீரட்டத் தலங்கள் இல்லை என்பது என்னவோ உண்மைதான். காலத்தை ஒட்டி மக்களின் வழிபாட்டு முறைகளும், வழிபடும் தெய்வங்களும், மாறுபடுகின்றன அல்லவா?

திருமந்திரம் ஒரு ஞான நூல். ஆன்ம ஞானத்தின் மூலம் இறைவனை ஒவ்வொரு சீவனும் அடையும் மார்க்கத்தை விளக்கும் நூல். அந்த முறையிலே சிவபெருமானுடைய இந்த எட்டு வீரச்செயல்களும், சிவயோக நெறியிலே முன்னேற விரும்பும் சாதகனுக்கு எட்டு படிகளை உணர்த்தும் வகையில் அமைந்துள்ளதைக் காணலாம்.

அஷ்ட மூர்த்தி என்றும், எண்குணத்தான் என்றும் போற்றப்படும் சிவபெருமானை அடைய, அட்டாங்க யோகத்தை ஒரு சிறந்த பாதையாக தமிழிலே முதன்முதலில் அமைத்துக் கொடுத்தவரும் திருமூலரே. திருமந்திரத்தில் அட்டாங்கயோகப் பகுதியை ஒட்டியே அதற்கு முன்னர் அமைக்கப் பட்டுள்ளது இந்த அட்ட வீரட்டப் பகுதி. அட்டாங்க யோகத்தில் நுழையும் சாதகனுக்கு, வீரட்டானேசுவரரை வணங்கி, இறைவனின் வீரச்செயல்களையும், அதன் உட்பொருளையும் சிந்திப்பது ஒரு முன்பயிற்சியாக அமைக்கப்பட்டிருக்குமோ, என்று எண்ணத் தோன்றுகிறது.

இனி, சுருக்கமாக, பதிவலி வீரட்டம் என்ற தலைப்பில் உள்ள இந்த திருமந்திரப் பகுதி உணர்த்தும் எட்டு படிகளை சிந்திக்கலாம்.

**ஆசையை விடுத்தல்** முதன்மையான அறிவுரை:
"ஆசை அறுமின்கள், ஆசை அறுமின்கள்
**ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்" என்பார் திருமூலர்.**

காம தகனம் எனும் வீரச்செயல் இக்குணத்தை உணர்த்துகிறது. திருக்குறுக்கையமர்ந்த ஈசனைப் பணிந்து இந்த நற்குணத்தை அடைய முயற்சிப்பது சிவயோக நெறியில் முதல்படி எனக் கொள்ளலாம். ஆசைதான் கோபத்திற்கு வித்து."காமாத் க்ரோதோபி ஜாயதே". ஆசையினின்று பிறப்பது கோபம் என்கிறது கீதை. கோபத்தின் முழு உருவம் சலந்தரன். சலந்தரவதம் கோபத்தை வெல்வதின் அவசியத்தை உணர்த்துகிறது. திருவிற்குடியமர்ந்த வீரட்டானேசுவரரைச் சிந்தையில் வைத்து இந்த வெகுளி என்னும் அரக்கனை வெல்ல வேண்டும். அடுத்து வெற்றி கொள்ள வேண்டியது 'நான்' 'எனது' என்ற அகங்காரம். தனக்கு மேல் ஒருவனில்லை என்ற எண்ணம். ஒருவித மயக்கத்தினால் வருவது. மெய்ப் பொருள் எது என்ற அறிவு இன்மையால் நிலையற்ற பொய்ப்பொருட்கள் மீது பற்றும் நம்பிக்கையும் கொள்ளும் மயக்கம்.

இதற்கு உதாரணம் தக்கன். தக்கனின் யாகத்தை அழித்து அவனுக்குப் பாடம் புகட்டி திருப்பறியலூர் வீரட்டானேசுவர்ரைப் பணிந்து மதிமயக்கத்தை வெல்லவேண்டும்.

**"காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்
நாமம் கெடக் கெடு நோய்" (திருக்குறள் 360)**

என்னும் குறள் இங்கு சிந்திக்கத் தக்கது. மேற் சொன்ன மூன்று தீக்குணங்களையும் திருமந்திரம் முக்குற்றம் என்று பெயரிட்டழைக்கிறது.

இப்பொழுது சாதகன் மும் மலங்களை எதிர்கொள்ளத் தக்க நிலையை அடைகிறான். வினைகளைக் களைவது கடினமான காரியம்தான். சரியை, முதலான நான்கு மார்க்கங்களை சைவ சித்தாந்தம் தெளிவு படுத்துகிறது. திரிபுரஸம்ஹாரம் என்ற வீரச்செயல் மலங்களை அறுப்பதைக் குறிக்கும். திருவதிகை வீரட்டானேசுவரரை நினைத்து பாசத்தைக் களைவதில் முனைய வேண்டும்.

மேற்சொன்ன மூன்று மலங்களிலே ஆணவ மலம் மிகுந்த வலிமையுடையது. அநாதியாய் வருவது. சீவனுக்கு இயற்கையான அஞ்ஞானம் அல்லது அறியாமையால் சூழப்பட்டிருப்பது. ஆத்மாவின் உண்மை ஸ்வரூபத்தை உணரத் தடையாக இருப்பது. இறைவனருள் துணையிருந்தால்தான் இதை வெல்ல முடியும். மெய்ப்பொருள் அஞ்ஞானமே அந்தகாசூரன். அந்தகாசுர வதம் செய்து திருக்கோவிலூர் இறைவன் அக இருளை நீக்கி பதிஞானம் பெறச்செய்வான்.

சாதகனின் இறைப்பயணத்தில் புலனடக்கம் மிக முக்கியம். சரீர பலமோ, கர்மேந்திரியங்கள், ஞானேந்திரியங்கள் என்று சொல்லப்படும் பத்து இந்திரியங்களோ நம்மை இறைவனிடம் கொண்டு சேர்க்காது. புலன்கள் மதம் பிடித்துத் திரியும் யானையைப் போன்றவை. விழிப்புடன் இல்லாத சாதகனை அவை தன் வசப் படுத்திவிடும். மாறாக எவன் புலன்களைத் தன் வசப்படுத்துகிறானோ அவன் சிவஞானம் பெறத் தகுதியுடையவன் ஆவான். வழுவூர் கஜசம்ஹார மூர்த்தி உணர்த்தும் படிப்பினை இது.

புலன்களால் பலனில்லை என்றால் அறிவை நம்பலாமா? வெளியுலக அறிவினாலோ சாஸ்திர சம்பந்தமான அறிவினாலோ பலனில்லை என்பார் திருமூலர்.

**“எல்லாம் அறியும் அறிவுதனைவிட்டு**
**எல்லாம் அறிந்தும் இலாபம் அங்கில்லை”.**

இது திருமந்திரம்.

**“எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள்**
**மெய்ப் பொருள் காண்பது அறிவு”.** **திருக்குறள்.**

அறிவிற்கு அப்பாற்பட்டவன் இறைவன் என்பதை உணரும் அறிவே உண்மை அறிவு. அறிவுக்கே அதிபதியான பிரும்மா, அறிவுச் செருக்கினால் துன்பமடைந்த கதை இதற்கு எடுத்துக் காட்டு.

சரி. மேற்சொன்ன ஏழு நிலைகளையும் கடந்து வந்த சாதகன் அடையும் பலன் என்ன? அதை மார்க்கண்டேயன் கதை உணர்த்துகிறது. காமம், வெகுளி, மயக்கம் இவற்றைத் துறந்து, வினைகளை அறுத்து, புலனடக்கத்துடன் அஞ்ஞான இருளை அகற்றி இறைவனிடம் தஞ்சமடைகிறானோ அவன் சிவனருளால் சிவனிடமே ஐக்கியமாவான்.

திருச்சிற்றம்பலம் 

# நன்றியுரை

சாத்தனூரில் திருமூலருக்கு ஒரு ஆலயம் அமைத்து மாதந்தோறும், அசுபதி நட்சத்திரத்தில் வழிபாடும், வருடந்தோறும் சம்வத்ஸர அபிஷேகம், குருபூஜை போன்ற சிறப்பு நிகழ்ச்சிகளும் பல வருடங்களாகத் தடையின்றி நடைபெற்று வருகின்றன.

திருமூலர் திருமந்திரப் பெருமன்றம் என்ற ஒரு சிறு அமைப்பு ஆலயப் பணிகளை மட்டுமன்றி திருமந்திரச் சிந்தனைகள் மக்களைச் சென்று அடையும் வண்ணம் ஒவ்வொரு குருபூஜையன்றும் ஒரு சிறு நூலை வெளியிட்டு வருகின்றனர்.

அந்த முறையில் இந்த வருடம் “திருமந்திரச் சிந்தனைகள் அட்ட வீரட்டம்” என்ற இச்சிறுநூல் வெளியிடப்படுகிறது.

திருவாவடுதுறை ஆதீனம் குருமகாசன்னிதானம் அவர்கள் இந்நூலுக்கு ஒரு அருமையான அருள் ஆசியுரை வழங்கியுள்ளார்கள். அவர்களுக்கு என் பணிவான நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

“எல்லாம் திருமூலர் திருவருள்”.

என் நண்பர் வலயப்பேட்டை திருப்புகழ் அமுதன் திரு. கிருஷ்ணன் அவர்கள் தேவாரப் பாடல்களின் கருத்துகளை எழுதியளித்ததோடு, அவ்வப்போது ஆலோசனைகளை வழங்கி உதவினார்கள். அவர்களுக்கு என் அன்பு கலந்த நன்றி.

எனது மருமான் S. ரமணி அவர்கள் கணினியில் type செய்து வடிவமைத்துக்கொடுத்தார்கள். Exeter Premedia நிறுவனமும் அதன் நிர்வாக இயக்குனர் திருமதி ஸௌம்யா ரவி அவர்களும், கணினியில் புத்தக வடிவில் சீரமத்துத் தந்தனர். அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி.

Universal Publishing நிறுவனம் அழகான புத்தக வடிவில் இதனை வெளிக்கொணர்ந்துள்ளார்கள்.

இந்த நூல் திருமூலர் அடியார்கள் கையில் தவழ்கிறது என்றால் அது இறைவன் திருவருளாலும், திருமூலர் குருவருளாலும் அன்றி வேறில்லை.

ரா. மகாதேவன்,
சென்னை.
(அலைபேசி: 98409 29729)

திருச்சிற்றம்பலம் 

உ

# பதிவலியில் வீரட்டம் எட்டு

திரு கி.வா.ஜகந்நாதன் அவர்கள், M.A.
சென்னை.

இங்கே ஞானச்செங்கோல் செலுத்தி வரும் அருள் உருவாகிய மகாசந்நிதானம் அவர்களுக்கும், தலைவர் அவர்களுக்கும், நண்பர்களுக்கும் என்னுடைய வணக்கம் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

திருமூலர் திருமந்திரத்தில், இரண்டாம் தந்திரத்தில், இரண்டாவது அதிகாரமாகிய **"பதிவலியில் வீரட்டம் எட்டு"** என்பது பற்றி பேசும் வாய்ப்பு எனக்குக் கிடைத்திருக்கிறது. முன்னாலே என்னை அறிமுகப் படுத்திய தலைவர் அவர்கள், எங்களுடைய ஆசிரியப்பிரானின் திருநாமத்தைச் சொன்னார்கள். திருவாவடுதுறையோடு தொடர்பு பெற்று, அதனை எல்லாக் காலத்தும், தாம் நினைப்பது மாத்திரமின்றி, பிறரும் நினைக்கும் வண்ணம் செய்தவர்கன் அந்தப் பெரியார் ஆவார்கள். அவர்கள் எந்தப் பேரவையில் பேசினாலும், எந்தப் பொருள் பற்றிப் பேசினாலும், திருவாவடுதுறை மடம் அவர்கள் கண்முன் வந்து நிற்கும். அதை, அவர்கள் பேச்சைக் கேட்டவர்கள் நன்கு அறிவர். அத்தகைய பெரியாருடைய திருவடியின் கீழ் இருந்து படிக்கின்ற பாக்கியம் எனக்குக் கிடைத்திருக்கிறது. அதனாலேயேதான் இந்த ஆதினத்தின் ஒரு தொடர்பு எளியேனுக்கும் கிடைத்தது.. இது இறைவனது திருவருள் விளைவு என்றே நான் கருதுகிறேன். தலைவர் அவர்கள் மிக அருமையான ஒரு கருத்தை **'தமிழிலக்கியத்தில் எட்டுத் தொகையை நிலைநிறுத்திய பெரியாரிடம் இருந்துபாடம் கேட்டவருக்கு அட்டவீரட்டத்தைப் பற்றி பேசும் வாய்ப்புக் கிடைத்தது பொருத்தம்'** என்று சொன்னார்கள். பொருத்தமான பொருள்கள் அறிவுடைப் பெருமக்களுக்கு நன்றாக புலனாகும் என்பதற்கு இது ஒரு சிறந்த சான்றாகும்.

**'அட்ட வீரட்டம்'** என்றால், இறைவன் செய்த வீரச்செயல்களைப் புலப்படுத்துகின்ற எட்டு ஸ்தலங்கள் என்று பெயர். **'வீரஸ்தானம்'** என்ற வடமொழித் தொடர் **'வீரட்டானம்'** என்று தமிழிலே மாறியது. மூலஸ்தானம் என்பது மூலட்டானம் என்று மாறியது போல, பின்னும் குறுகி **'வீரட்டம்'** என்று வந்தது. எட்டு ஸ்தலங்களிலே இறைவன் செய்த எட்டு வகையான வீரச்செயல்களைக் குறிக்கும் முறையிலே அந்த வரலாறுகளை விளக்குவதனால் 'அட்ட வீரட்டம்' என்று இந்நாட்டிலே எட்டு ஸ்தலங்களைச் சொல்வார்கள். எட்டு ஸ்தலங்களிலே ஏழு ஸ்தலங்கள் தேவார ஆசிரியர்களால் பாடல் பெற்றன. வழுவூர் என்ற ஸ்தலம் மாத்திரம் வைப்புத் ஸ்தலமாக இருக்கிறது. ஞானசம்பந்தர் பாடிய பாடல்கள் கிடைக்கவில்லை. திருமூலர் ஒவ்வொரு வீரட்டத்திற்கு ஒவ்வொரு பாடலாகப் பாடியிருக்கின்றார். அதை மாத்திரம் கொஞ்சம் சுட்டிக்காட்டலாம் என்று நினைக்கிறேன்.

---

*நன்றி -- திருவாவடுதுறை ஆதீனம். திருமந்திர மாநாட்டு மலர் 1962.

முதலிலே திருக்கோவலூரைப்பற்றிப் பேசுகிறார். அந்தகாசுரன் என்பவன் தேவர்கட்குத் துன்பம் செய்துகொண்டிருந்தான். அதுகண்ட தேவர்கள் இறைவனிடத்திலே முறையிட்டார்கள். அந்தகாசுரனை ஆண்டவன் சூலத்தால் கொன்று அழித்தான். அந்த வரலாறுதான் அந்தகாசுரனுடைய சங்கார வரலாறு. அதை நினைவுபடுத்துகிற ஸ்தலம் திருக்கோவலூர் என்று வழங்கப் படுகின்ற 'கோவல் வீரட்டம்'

**"கருந்துறை அந்தகன் தன்போல் அசுரன்**
**வரத்தின் உலகத்து உயிர்களை எல்லாம்**
**வருத்தன் செய்தான் என்று வானவர் வேண்டக்**
**குருத்தூயர் சூலம் கைகொண்டு கொன்றானே".**

எமனைப் போன்றிருந்த அந்தகாசுரன் ஆண்டவனிடம் தான் பெற்ற வரத்தின் சிறப்பால் பிறருக்குத் துன்பம் தருவதையே தன்னுடைய செயலாகக் கொண்டிருந்தான். அவனுடைய அந்தச் செயல்களால் நலிந்த வானவர்கள் இறைவனைப் பார்த்து வேண்ட ஆண்டவன் மூன்று கொழுந்தாக இருக்கும் சூலத்தால் அவனைக் குத்தி சங்கரித்தார். அடுத்த பாட்டிலே திருப்பறியலூரில் நிகழ்ந்த தக்க யாக சங்காரத்தை நமக்கு நினைவூட்டுகிறார்.

**"கொலையிற் பிழைத்த பிரசா பதியைத்**
**தலையைத் தடிந்திட்டுத் தானங்கி யிட்டு**
**நிலையுல குக்கிவன் வேண்டுமென் றெண்ணித்**
**தலையை யரிந்திட்டுச் சந்திசெய் தானே".**

கதை இங்குள்ளவர்களுக்குத் தெரியும். தக்கன் சிவபெருமானிடத்தில் ஏற்பட்ட கோபத்தினால் யாகம் செய்தபோது, ஏனைய தேவர்களை அழைத்தான். மகாதேவனை அழைக்கவில்லை. அப்பொழுது நமது சிவபெருமான் வீரபத்திரர் உருவத்தில் எழுந்தருளி, தக்க யாகத்தைச் சிதைத்து, அந்த யாகத்திற்கு வந்த தேவர்கட்கு தண்டனை அளித்து, தக்கனுடைய தலையை அரிந்து அந்தத் தலைக்குப் பதிலாக ஆட்டின் தலையை வைத்தார் என்று சொல்லுகிறார்.

பிரமாவுக்குத் துணையாக இருக்கும் தக்கனை நினைக்கிறார் திருமூலர். தக்கன் என்ன தவறு செய்தான்? கொலையினாலே பிழை செய்தான் தக்கன். மிக நுட்பமாகச் சொல்லவேண்டுமானால், கொலையால் பிழை செய்தான். யாகம் செய்வதாக புகுந்தான். யாகத்திற்கு – யக்ஞத்திற்குத் தலைவனாக இருப்பவன் பரமேசுவரன்: யக்ஞேசுவரன். தலைவன் இல்லாமல் யாகம் செய்யமுடியுமா? ஒரு கல்யாணத்திற்கு புரோகிதர் வந்தார்; கொட்டுமேளம் வந்தது; எல்லோரும் நிரம்பியிருக்கிறார்கள். ஆனால் கல்யாணம் பண்ணிக்கொள்கிற மாப்பிள்ளை வரவில்லை. மாப்பிள்ளை ஒருவந்தான் கல்யாணத்திற்கு உயிர் போன்றவன். மாப்பிள்ளை இல்லாவிட்டால் என்ன? எல்லோரும் வந்து விட்டார்களே என்று யாராவது சொல்வார்களானால், அது திருமணத்தினுடைய ஒரு தத்துவத்தைத் தெரியாதவர்கள் சொல்லும் வார்த்தையாகும்.

அதுபோல், தக்கன்செய்யும் யாகத்திற்கு எல்லாத் தேவர்களுமே வந்துவிட்டார்கள். யாகத்திற்கு வேண்டிய பசு வந்துவிட்டது; ஆடு வந்துவிட்டது. ஆனால் மகாதேவனுக்கு அவிர்பாகம் கொடுக்கவில்லை. கல்யாண மாப்பிள்ளை வராவிட்டாலும், வந்திருந்தவர்கள் விருந்துண்டார்கள் என்றால், அது கல்யாணவிருந்து ஆகாது. அது போலவே யாகத்திற்கு பசு, ஆடு இவை வந்திருந்தாலும், அது வேள்வி ஆகாது. மகாதேவனுக்கு அவிஸ் கொடுக்காமல், அவனை மறந்து செய்வதனால், அது வேள்வி ஆகவில்லை; கசாப்புக்கடையாகவே ஆயிற்று. தக்கன் கொலை செய்தான். தேவர்கள் சாப்பிட்டபொழுது தாங்கள் மிக நன்றாக வாழலாம் என்றுதான் நினைத்தார்கள். அது என்ன ஆயிற்று? அவர்களையெல்லாம் வீரபத்திரர் தாக்கும்படி ஆயிற்று.

யாகப்பசு என்று சொல்வது வழக்கம். ஆனால், வேத முறைப்படி செய்த வேள்வியாக அதைச் சொல்லமுடியாது. ஆட்டைக் கொலை செய்தான்.

மகாதேவனுக்கு அவிஸ் தரவில்லை; அதனால் வேள்வி ஆகவில்லை; அதனால் அது சிறந்த நிலையைப் பெறவில்லை என்ற குறிப்பை மணிவாசகர் சொல்கிறார். தேவர்கள் பெற்றது யாக அவிஸ் இல்லாததால், அவர்கள் தண்டனை பெற்றார்கள்.

இறைவனுக்குக் கொடுக்க வேண்டிய அவிசை மறந்துவிட்டதால், அது கொலை ஆயிற்று. ஆகவே, தக்கனுடைய தலையை வெட்டிவிட்டு, அதை அக்கினியில் போட்டு, நம்மை நினைக்க மறந்தவனுக்கு இன்ன தண்டனை என்பதை உலகம் தெரிந்துகொள்ளவேண்டும் என்பதற்காக, ‘இவன் இருக்கட்டும் என்று, அவனுடைய தலைக்குப் பதிலாகஆட்டுத் தலையை வைத்துச் சந்தி செய்தான் என்று தக்கயாக சங்காரத்தை இரண்டாவது பாட்டிலே சொல்லுகிறார்.

மூன்றாவது பாட்டிலே, பிரமதேவனுக்கு ஏற்பட்ட அகங்காரம் காரணமாக, அவனுடைய தலையைக் கிள்ளி, அதனைக் கபாலமாக ஆண்டவன் கையில் எடுத்து வீரச்செயல் புரிந்தான் என்று சொல்கிறார்.

**“எங்கும் பரந்தும் இருநிலந் தாங்கியும்**
**தங்கும் படித்தவன் தாளுணர் தேவர்கள்**
**பொங்கும் சினத்துள் அயந்தலை முன்றை**
**அங்கு அச் சுதனை உதிரங்கொண் டானே”.**

அவனுக்கும் ஐந்து தலை; ஆண்டவனுக்கும் ஐந்து தலை. இதனால் அயன் அகங்காரம் அடைந்தான். அதை அடக்குவதற்காக அயனுடைய ஒரு தலையை ஆண்டவன் கிள்ளி, அதை உலகம் காணவேண்டும் என்று கருதி, அதைப் பிரும்ம கபாலமாகக் கையிலே கொண்டார்.

அடுத்தது சலந்தராசுரன் கதை. அதை நினைவூட்டுகிற இடம் திருவிற்குடி ஸ்தலம்.

சலந்தாசுரன் யாவருக்கும் இடுக்கண் செய்து கொண்டிருந்தான். அவனைச் சங்காரம் செய்யவேண்டுமென்று ஆண்டவன் நினைத்தான். வேதியர் வடிவில் வந்து, 'நான் இவர்களையெல்லாம் அடக்கப்போகிறேன்' என்று சொன்னார். அவர் தன் விரலால் தரையில் ஒரு சக்கரத்தை அமைத்தார். சலந்தராசுரனைப் பார்த்து, 'இச்சக்கரத்தை எடு, உன்னுடைய ஆற்றலைப் பார்க்கலாம்' என்று சொன்னார். அவன் அதை எடுத்துத் தலையில் வைத்த உடனே, அந்தச் சக்கரம் சலந்தராசுரனுடைய தலையைக் கரகர என்று அறுத்துவிட்டது. அந்தப் பாட்டைச் சொல்லும்போது, திருமூலர் உள்ளுருகிச் சொல்கிறார்.

**"எங்கும் கலந்துமென் உள்ளத் தெழுகின்ற**
**அங்க முதல்வன் அருமறை யோ திபால்**
**பொங்கும் சலந்தரன் போர் செய்ய நீர்மையின்**
**அங்கு விரற்குறித்து ஆழி செய்தானே".**

சாஸ்திரங்கட்கெல்லாம் தலைவனென்று சொல்லப்படுகிற பெருமான் என்று சொல்கிறவர் தன்னோடு தொடர்புபடுத்திச் சொல்கிறார். 'எங்கும் கலந்தும்' என்றால், அவன் இல்லாத இடம் ஒன்றுமில்லை. பார்க்குமிடமெங்கும் இருக்கிறான். ஆனால், என் மாட்டு எப்படி இருக்கிறான்? என் உள்ளத்தில் எழுகின்ற தலைவன் என்கின்றார். என்னுடைய உள்ளத்திலே எழுகின்றான் அவன் என்று சொல்லுகிறார். அடியார்களுடைய உள்ளத்திலே கோயில் கொண்டிருக்கிறான் என்று சொல்வது வழக்கம். அவன் நினைப்பவர் மனத்தைக் கோயிலாக் கொண்டவன். அதை நாம் பார்க்கும்போது, ஆண்டவன் அடியார்களுடைய திருவுள்ளத்தில்தானா இருக்கிறான் என்ற கேள்வியும் எழுகிறது. இறைவன் எங்கும் இருக்கிறான் என்று சொல்கிறார். அடியார் உள்ளத்தில் மாத்திரம் இருக்கின்றான் என்று சொன்னால், ஏனைய இடத்தில் இல்லை என்பது தெரிகிறது. அது உண்மையானால், அவன் எங்குமிருக்கிறானா என்ற ஐயம் ஏற்படும். அப்பர் சுவாமிகள், 'நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்' என்று சொல்லியது சரியா? இல்லையா? என்று ஐயப்பாடு கூடவே எழுகிறது.

இறைவன் எங்கும் இருக்கின்றான். உண்மைதான், இப்பொழுது நம்முடைய தலைவர் இங்கே இருக்கிறார். அவர் தமது பல்கலைக்கழகத்திலும் இருக்கிறார், இன்னும் பல இடங்களிலும் இருக்கிறார். ஆனால் அவருடைய மனம் போனபோக்கிலே சுதந்தரமாக் இருக்கும் ஒரு இடம் வீடு ஆகும். இன்னொரு உதாரணம் பார்ப்போம்.

ஒருவன் அலுவலகத்தில் வேலை செய்கிறான். அங்கே மின்சார விசிறி இருக்கிறது; மணி அடித்தால் ஆள் வருகிறான்; எல்லாவகையான ஆணையையும் நடத்திக்கொண்டிருக்கிறான். ஆனாலும், மாலையில் மணி அடித்தவுடனே வீடுபோக ஆசைப்படுகிறான். வீடு அத்தனை வசதி உடையதாக இல்லை. இல்லாவிட்டாலும், அங்கு போக ஆசைப்படுகிறான். காரணம் என்ன? அலுவலத்தில் ஒரு வரையறைக்குள்ளே அடங்கி வேலை செய்யவேண்டி இருக்கிறது. சிறந்த ஆணையாளனாக இருந்தாலும் ஒரு

கட்டுப்பாட்டுக்குள்ளே வேலை செய்கிறான். ஆனால், தன் மனம் போனபடி, எதை வேண்டுமானாலும் எடுத்துப் பார்ப்போம் என்ற உரிமை தன் வீட்டில் இருக்கிறது. அதனால் வீட்டுக்குப் போக ஆசைப்படுகின்றான். அங்கு போய் தன் சொந்த சொரூபத்தில் இருப்பான். தன் சக்தியைக் காட்டுவான். அதுபோல், இறைவன் எங்கும் இருக்கிறார்; எல்லோருடைய உள்ளத்திலும் இருக்கின்றார், என்றாலும் சில இடங்களில் அவசரமாக வந்துபோகிறான்; சில இடங்களில் அலுவலாகக் கடமைக்காக இருக்கிறவன்போல் இருக்கின்றான், சில இடங்களில் நடந்து கொண்டே இருக்கிறான். ஆனால், சில இடத்தில், தன் சொந்த இடத்தில் இருக்கிற மாதிரி இருக்கின்றான்; தனது சைதன்யம் அத்தனையையும் வெளிப்படுத்திக் கொண்டு, மிக ஈடுபாடாக இருக்கின்ற இடம் எது என்றால் அதுதான் நினைப்பவரின் மனம். தானாக விரும்பி, தன் சொந்த இடமாகக் கொண்டு, தன் அருள் முழுவதும் நிரம்பிக் கிடக்கிறது என்று சொல்லும்படி அவன் இருப்பது நினைப்பவர் மனம்.

ஆகையினால், ஆண்டவனை உளம் கனிந்து, உள்ளன்பினால் யார் யார் வழிபடுகிறார்களோ அவர்களைப் பார்த்தால், ஆண்டவன் ஒருவன் இருக்கிறான் என்று நமக்குத் தெரியும். ஆண்டவன் இல்லை என்று சொல்கிறவர்களுக்கும் தெரியும். தன்னை நினைக்கிறவர்களிடத்திலே சைதன்யத்தை மிகுதியாக ஆண்டவன் காட்டிக்கொண்டு இருக்கிறான். ஆண்டவன் திருவருள் இவர்கள் மூலமாகத் தோன்றும்படியாக இருக்கிறான். ஆகையால், எங்கும் கலந்து இருக்கும் ஆண்டவன் என் உள்ளத்து எழுகிறான்; எங்கும் இயங்குகிறான்; சைதன்யத்தைக் காட்டுகிறான் என்ற உயர்ந்த உண்மையை இந்தப் பாட்டில் சொல்கிறார்.

> **“எங்கும் கலந்துமென் உள்ளத் தெழுகின்ற**
> **அங்க முதல்வன் அருமறை யோ திபால்**
> **பொங்கும் சலந்தரன் போர் செய்ய நீர்மையின்**
> **அங்கு விரற்குறித்து ஆழிசெய் தானே”.**

இப்படி திருவிற்குடியில் ஜலந்தராசுரன் வதத்தை நினைக்கும்போது உள்ளத்திலே ஆண்டவன் எழுந்தருளியிருக்கும் கிளர்ச்சி பெற்றதைக் குறிப்பிடுகிறார்.

அடுத்து முப்புரம் செற்ற கருத்தைப் பாடுகிறார். இந்த ஊரிலேதான் முப்புரத்தைச் சங்காரம் செய்த வீரச்செயல் நிகழ்ந்தது என்று சொல்லிக்கொண்டு அதோடு மட்டும் நின்று விடுகின்றார்கள் மக்கள் என்று கூறுகின்றார். **“முப்புரம் செற்றனர் என்பர்கள் மூடர்கள்”**. அதாவது சொல்வதோடு நிற்பவர்கள் மூடர்கள். மெய்ப்பொருளைக் காணவிரும்பாமல், கிளிப்பிள்ளைபோல் சொல்லிக் கொண்டே இருப்பவர்கள். அறிவு இல்லாதவர்கள், உட்கருத்தை அறியாமல் வீணாகச் சொல்கிறார்களே என்று இரங்குகிறார்.

ஆண்டவன் குளிருக்குக் குளிர்ச்சி; தீக்குத் தீ; தலையிலே கங்கையை வைத்த சடையுடையவன், கையிலே தீ இருக்கிறது. ஆண்டவன்

தண்மைக்கும் இருப்பிடம்; வெம்மைக்கும் இருப்பிடம். தண்மையைக் காட்டவேண்டுமிடத்தில் தண்மையையும், வெம்மையைக் காட்டவேண்டிய இடத்தில் வெம்மையையும் காட்டுவான்; மின்சாரத்தினால் ரிப்ரிஜிரேட்டரும் இயங்குகிறது. மின்சாரத்தினால் ஸ்டவ்வும் இயங்குகிறது. பட்டிக்காட்டான் ஏ விவரம் தெரியாதவன் வேண்டுமானால் அவன் சொல்லலாம், ரிப்ரிஜிரேட்டரைத்தான் மின்சாரம் இயக்கமுடியும் என்று; அல்லது மின்சாரம் ஸ்டவ்வைத் தான் இயக்க முடியும் என்று. இரண்டும் உண்மை. இரண்டும் பொய். நெருப்பை உண்டாக்குகிறது என்பது சரி. நெருப்பைத்தான் உண்டாக்குகிறது என்பது பொய். இரண்டுமே ஒரே இடத்தில்தான் உண்டாகிறது. கருவிக்குத் தக்கபடி குளிர்ச்சியும், தீயும் பிறக்கிறது. இரண்டுக்கும் மூலமாக இருப்பது மின்சாரம். இப்படி விஞ்ஞானம் காட்டுகிறது ஆண்டவன் திருவுருவத்தை.

இறைவன் புரத்தை எரித்தான்; கங்கையையும் தலையில் வைத்திருக்கிறான். கங்கை தண்மையானது அல்லவா? அங்கே எப்படி வெம்மை உண்டாகும் என்று கேட்டால், அதை மின்சாரம் நன்றாகப் புலப்படுத்தும்.

**“முப்புரம் செற்றனர்”** என்ற மாத்திரம் சொன்னவர் அறிவு இல்லாதவர்கள், மும் மலங்கள் போகவேண்டுமானால், அந்த மும்மலத்தையும் அழிக்கக்கூடிய ஆண்டவன் திருவருள் வேண்டும். மலத்திலிருந்து நீங்கி, இன்பம் காணவேண்டும் என்பது திரிபுரம் எரித்த வரலாறு புலப்படுத்தும். மும்மலங்களழிய வேண்டும் என்பது மிகவும் அவசியம் என்பதைத் திருமூலர் நினைவூட்டுகிறார்.

> **“முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்**
> **முப்புரமாவது மும்மலகாரியம்”.**

திருக்கடவூரில் ஆண்டவன் காலனை உதைத்துக் கொன்றான். இதற்கு யோக முறையிலே ஒரு பொருள் சொல்கிறார்கள். ஆண்டவன் கால ஸ்ம்ஹாரம் செய்தது போல் நாமும் செய்யவேண்டும். ஆண்டவன் கடவூரில் செய்தான். நாம் இந்த கடவூரில் அதாவது இந்த உடலில் செய்யவேண்டும். ஆண்டவன் காலால் உதைத்தான். நாம் நம்முடைய நாடி வழியாக ஓடும் காற்றைக் கட்டுப்படுத்தவேண்டும் என்பதையும் புலப்படுத்துகிறார். இறைவன் அன்று செய்த காரியத்தை நாம் ஏதோ கதை என்று நினைக்காமல், யோகப்பயிற்சியிலே செய்து, என்றும் மாறா இளமை உடையவர்களாக நாம் இருக்கவேண்டும்.

காமசம்ஹாரம்: இது திருக்குறுக்கை நிகழ்ச்சியைப் புலப்படுத்துகிறது. மனம் பல வழிகளில் படர்ந்து, ஆசை உண்டாக்கும். காமம் என்றால் மையல். ஆயிரமாயிரம் கிளைகளாகப் படர்ந்து செல்லும் மனத்தின் ஆசையை அடியோடு அழிக்க முடியாது. பரவி இருக்கும் மனத்தை ஒருமுகப்படுத்த வேண்டும். முதலிலே வட்டமாக ஆக்கி, அப்புறம் மையமாக்கவேண்டும். சண்டி மாட்டை வசப்படுத்த முளையிலே கட்டவேண்டும். கயிரு சுற்ற சுற்ற அது முளை அருகே வந்துவிடும். அதுபோல், மனத்து ஆசையைத்

திடீரென்று அறுக்க முடியாது. இறைவன் என்ற முளையை சுற்றி சுற்றி வரச்செய்தால் படர்ந்திருக்கும் மனம் ஒன்றிவிடும். இப்படி மனோலயம் வரும்.

மனோலயம் உண்டாகி, பிறது தியானம் உண்டாகும். அப்பொழுது மனம் நாசம் ஆகும். செயல் மாண்டுவிடும். ஒருமைப்பட்ட மனம் இருந்தால் காமச்செயலை அழிக்கலாம். அதைத்தான் திருக்குறுக்கைச் சம்பவம் உணர்த்துகிறதாகத் திருமூலர் சொல்லுகிறார்.

ஆகையால், திருமூலர் சொல்கிற அட்டவீரட்டம், ஆண்டவன் அட்ட வீரட்டத்தில் செய்த எட்டுவிதமான வீரச்செயல்களைப் பற்றிச் சொல்லி; கும்பிடு போட்டால் மட்டும் போதாது, நாமும் அட்ட வீரட்டத்தைச் செய்யவேண்டும். அதாவது எட்டுவிதமான வீரம் காட்டவேண்டும்; அறியாமையாகிய அந்தகனைக் கொல்லவேண்டும்; ஆண்டவனுக்கு நிவேதனம் செய்யாதது பொருள் அல்ல; ஆண்டவனுக்கு நிவேதனம் செய்யவேண்டும்; மும்மலங்களை அழிப்பதற்குப் பயில வேண்டும்; யோகப் பயிற்சி செய்து, பெருவாழ்வு பெற வேண்டும்; படருகிற மனத்தை ஒருமுகப்படுத்தி, ஆசையை நீக்க வேண்டும்; ஆண்டவன் செய்த எட்டு வீரச் செயல்களை நாமும் செய்யவேண்டும் என்று வற்புறுத்துகிறது.

திருச்சிற்றம்பலம் 

## ஆசிரியரின் இதர நூல்கள்:
## (திருமூலர் திருமந்திர பெருமன்றம் வெளியீடு)

1. மந்திரங்கள் நூறு
2. மந்திரங்கள் முன்னூறு
3. பதி, பசு, பாசம் ஒரு அறிமுகம்
4. திருமூலர் அவதரித்த சாத்தனூர்
5. திருமந்திரத்தில் அட்டாங்க யோகம்
6. மனமே நீ கேள்
7. திருமந்திரச் சிந்தனைகள் - எண்ணில் விரிந்த எண்ணங்கள்

---

திருமூலர் கோயில் தொடர்புக்கு

திரு M. சந்திரசேகரன் 9444431891
சாத்தனூர்

திரு R. மஹாதேவன் 9840929729
சென்னை

